REGD NO. M. 1823 | போன்: காரைக்குடி 64. | மலாயாவில் 12-சத இந்தியாவில் 2-அணா




# குமரன்




வெள்ளி தோறும் வெளிவரும்

ஆரம் 25 | மகளிர் இல்லம், காந்தி ஆண்டு 79, ஆடி 22-உ (6—8—48) | முத்து 51

சுதந்திரம் வந்த பின்னர் நாட்டில் சமூக சேவையின் அவசியம் வெகுவாய் அதிகரித்துவிட்டது. ஜனங்கள் ஏராளமாக ஆக்கவேலையில் ஈடுபட வேண்டும். சேவா ஸ்தாபனங்கள் பரஸ்பரம் ஒத்துழைத்து இணைப்பாக வேலை செய்தால் சிறந்த பலன்கள் ஏற்படும்.' வட இந்தியாவில் நிவாரண குடியேற்ற வேலையில் திருமதி மவுண்ட் பேட்டன் செய்த சேவை மிகவும் பாராட்டத் தக்கது. இந்திய மக்களும் குறிப்பாகப் பெண்களும், சேவா ஆர்வம் கொண்டவர்கள்.

சில விஷயங்களில் நான் ஜனங்களுக்கு யோசனை கூற முடியும். ஆனால் பல விஷயங்களில் நான் தக்க யோசனை கூற முடியுமென்று சொல்வதற்கில்லை. எனினும் உங்கள் வேலையை முன்னைக்காட்டிலும் இன்னும் தீவிரமாக முழு மூச்சுடன் நிறைவேற்றி வாருங்கள் என்று நான் யோசனை கூறுவேன். நாம் நமது பிரச்னைகளை வென்றுவிடவில்லை என்பது பிரத்யட்சமே. சேவா சமாஜம் சம்பந்தப்பட்ட பிரச்னைகளைப் பற்றி நான் குறிப்பிடவில்லை. பொதுவாக தேசத்தின் முன்புள்ள பிரச்னைகள் பற்றியே கூறுகிறேன். சுதந்திரம் வந்துவிட்டது. அத்துடன் பெரும் பொறுப்புகளும் ஏற்பட்டுள்ளன என்பதை நாம் இன்னும் உணரவில்லை. ஜனநாயக சுதந்திரத்தில் பலருக்காகவே ஒருவர் வாழ முடியும்; ஏதாவது ஆக்கத் துறையில் பரஸ்பரம் உதவி, வாழ்வதால்தான் நாம் மிகுந்த சக்தியுள்ளவர்களாக விளங்க முடியும்.

நெடுங்காலமாக நாம் ஒரு எதிர் கட்சியினராகவே இருந்து பெரும்பான்மையும் அரசியல் சுதந்திரத்திற்காகவே பாடுபட்டுள்ளோம். அந்த எதிர் கட்சி மனப்பான்மையை சுலபமாக நாம் நீக்கிவிட முடியாது. ஆனால், எப்படியாயினும் அந்த மனப்பான்மை நீங்கியே ஆகவேண்டும். ஏனெனில் அவசியமானபோது நாம் யோசனைகள் கூறவேண்டிய காலம் வந்துவிட்டது. ஆனால் அந்த யோசனைகள் ஆக்கத் துறையில் இருப்பதோடு நட்புறவுடன் கூடியதாய் உபயோகமானதாக இருக்கவேண்டும். வெறுமனே யாரையும் பழிக்கும் முறையில் குற்றங் கூறுவதால் பயனில்லை.

ஆக்க முறைகளில், சேவைகளில் ஈடுபட்டுள்ள இடங்களுக்குப் போவதோ, அல்லது சேவை செய்யும் அங்கத்தினர்களைச் சந்திப்பதோ எனக்கு மிகவும் சந்தோஷம். தங்கள் வேலையில் இவ்வித ஸ்தாபனங்கள் மேலும் மேலும் சிறந்தோங்க வேண்டுமென நான் வாழ்த்துகிறேன். சேவை செய்வதில் மேலும் மேலும் பலர் சேர்வார்கள் என்று

## பண்டித நேருஜியின் பொன்னுரைகள்

—:O:—

நம்புகிறேன். சேவை செய்வதற்கு நிறைய இடம் இருக்கிறது. இந்திய ஜனங்களிடம், குறிப்பாக பெண்களிடம் சேவை செய்வதற்கான சிறந்த திறமையும் இருக்கிறது.

பல சங்கடங்கள் நம் முன் உள்ளன. ஆனால் பயங்கரங்களை நாம் கடந்து விட்டோம். வருமைப் படக்கூடிய விஷயம் ஒன்றுண்டு. கஷ்டம் கஷ்டமடைந்தவர்களுக்கு உதவும் வேலையில் பெண்கள் ஏராளமாக ஏற்பட்டுள்ளனர் என்பது மிகவும் பெருமைப்படத் தக்கதல்லவா.

வட இந்தியாவில் சில பெண்கள் செய்துள்ள மகத்தான சேவை அவர்களது உடல் உறுதியையும் மனோவலியையும் வெளி உலகுக்கு உணர்த்தியதுடன் அவர்களது நிர்வாகத்திறமை முதலியவற்றையும் உணர்த்தியது. முழு சக்தியுடன் உங்கள் வேலையை மேலும் மேலும் ஊழியர்களைச் சேர்த்துக்கொண்டு செய்து வாருங்கள். சென்னை அல்லது வேறு இடங்களுடன் நின்றுவிடாது உங்கள் சேவையை மேலும் மேலும் விஸ்தரித்து வாருங்கள் என்று சொல்வதைத் தவிர வேறு யென்ன யோசனை கூறுவதென எனக்குத் தெரியவில்லை. பொதுவாக பல்வேறு ஸ்தாபனங்கள் தங்கள் தங்கள் துறையில் சேவை செய்து வருகின்றன. ஆனால் அவைகளுக்கிடையே பரஸ்பரம் அதிக ஒத்துழைப்பு இருப்பதில்லை. நான் குற்றங் கூறுவதாக எடுத்துக்கொள்ளக் கூடாது. இங்குள்ள நிலைமை பற்றி எனக்குத் தெரியாது. வேறு இடங்களில் உள்ள நிலைமைகள்பற்றிய என் சொந்த அனுபவத்திலிருந்து நான் கூறினேன். ஆனால் கிட்டத்தட்ட நாமெல்லோரும் ஒரே மாதிரியே சேவை செய்து வருகிறோம். ஆனால் எவ்வளவுக்கெவ்வளவு ஒத்துழைப்பு அதிகமாக இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு சிறந்த பலன்கள் கிடைக்கும். இதற்காக குறிப்பிட்ட ஸ்தாபனங்கள் தங்களின் விசேஷத் தன்மையை இழந்துவிடாமலே அவசியமான ஒத்துழைப்பைப் பெற முடியும். வட இந்தியாவில் நிவாரண புனர்குடியேற்ற வேலைகளில் ஈடுபட விரும்பிய வங்கம், பம்பாய், ஐக்கிய மாகாணங்களில் நடந்தது பற்றி நீங்கள் அறிந்திருக்கலாம். லேடி மவுண்ட்பேட்டன் பல்வேறு ஸ்தாபனங்கள் இடையேயும் ஒத்துழைப்பு ஏற்படுத்தி நிவாரண புனர் குடியேற்ற ஐக்கிய கவுன்சில் ஒன்றை ஏற்படுத்தினர். இத்துடன் ஏராளமான சேவா ஸ்தாபனங்கள் இணைந்துள்ளன. ஒவ்வொரு ஸ்தாபனமும் தனித்தனியாக தனது துறையில் இயங்கிய போதிலும் அவைகளின் இஷ்டப்படி அவை ஒன்றுபட்டு இணைப்பாக வேலை செய்கின்றன. எனவே ஒத்துழைப்பு மிகவும் முக்கியம். அது இருந்தால் எதையும் சாதித்து விடலாம். ஆனால் டில்லி போன்ற இடங்களில் இவ்வித ஸ்தாபனங்கள் தேவைதான். ஆனால் அமைதி நிலவும் சென்னையில் அவை அவ்வளவு தேவையா என்று எனக்குத் தெரியாது. எப்படியிருந்த போதிலும் ஒத்துழைப்பு அவசியம்.

காந்திஜி படத்தைத் திறந்து வைக்கையில் பேசியதாவது:—

தேச இளைஞர்கள் மகாத்மா காந்தியின் உபதேசங்களின் அடிப்படையை உணர்ந்து அவர்களால் முடிந்தவரை அதன்படி நடக்கவேண்டும். மகாத்மா காந்தி இறந்து இப்பொழுது 6 மாதங்கள் ஆகிவிட்டன. அவர் கொலை செய்யப்பட்டவுடனேயே வருத்தமும் நடுக்கமும் உலகம் பூராவிலுமே ஏற்பட்டது. உலக முழுவதிலும் இம்மாதிரி வருத்தத்தைத் தரும்படி எவரும் இறந்ததில்லை என நான் நினைக்கிறேன். பெரிய மனிதர்களைப் படங்கள், சிலைகள் போன்றவைகளினால் கொண்டாடுவதன் அர்த்தம் எனக்குப் புரியவில்லை. அவ்வாறு செய்வதால் கடமையைச் செய்கிறோம் என எண்ணலாம். நாம் அவர்களது பெருமையைக் கண்டு ஆச்சரியமடைகிறோம். ஆனால் அவர்கள் சொன்னபடி நடப்பதில்லை. காந்திஜியின் படத்தையும் சிலையையும் வைத்து அவரை வானளாவப் புகழ்ந்து, ஆனால் அவரது கொள்கையில் மாறுபட்ட பலர் இருக்கிறார்கள். அது மகாத்மா காந்தியைப் பூஜிப்பதற்கு ஏற்ற வழியல்ல. அவர்களுக்கும் தகுந்ததல்ல. காந்திஜியின் உபதேசப்படி நடக்காமல், வாயால் அவரை வாழ்த்துவதில் பிரயோஜனமில்லை.

காந்திஜி செய்த பல்வேறு சேவைகளைப் பற்றி விபரமாக நான் கூறப் போவதில்லை. அவரது அடிப்படையும் வழியுமே முக்கியமானது. உங்கள்

(8-ம் பக்கம் பார்க்க)

## மகாத்மாவுக்கு ஐ. நா. கமிஷன் புகழுரை

ஜுலை 29உ காலை ஐ. நா. கமிஷன் மெம்பர்கள் ராஜ்காட்டுக்கு விஜயம் செய்து, மகாத்மா காந்தியை தகனம் செய்யப்பட்ட இடத்தைப் பார்வையிட்டு, அந்த மேடையில் புஷ்பங்களைத் தூவி வணக்கம் செலுத்திய பின் தலைவர் எக்பர்ட்கிராபி கூறியதாவது:

உத்தமர் மகாத்மா காந்திக்கு உலகம் முழுவதுமே கௌரவித்து அன்பு காட்டுகிறது. எங்களைப் போன்ற தூதர்களுக்கும் சர்வதேச ஸ்தாபனத்தின் ஊழியர்களுக்கும் அவர் ஒரு தனி வழி காட்டியிருக்கிறார். ஆதலின் இன்று இங்கு நாங்கள் அவருக்கு வணக்கம் செலுத்துவது மிகவும் முக்கியமான சம்பவம், மஹாத்மா காந்தி அடிக்கடி சர்ச்சைகளில் ஈடுபடுவார். ஆனால் சமரசமான முடிவைக் காண்பதிலேயேதான் அவர் கவனமெல்லாம் செலுத்தப்பட்டது. ஆரம்பத்தில் தென்னுப்பிரிக்காவில் போராட்டம் நடத்தியபோதிலும் சரி, இந்திய சுதந்திரத்துக்காகப் போராட்டத்தை நடத்தியபோதும் சரி, ஏன் கடைசியாக இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையே தகராறு முற்றியிருந்த போதும், அவர் பெருந்தன்மையுடன் தான் நடந்துகொண்டார். யாருடன் அவர் அபிப்பிராய பேதம் கொள்கிறாரோ அவருக்கு உயர் நீதியைப் புகட்ட அவர் முயல்வார். அவருக்கு ஓய்வென்பதே கிடையாது எனினும் தாழ்ந்தவர்கள் எந்த ஜாதியினராயினும் வந்தால் அவர்களுடைய குறைகளையும் தகராறுகளையும் தீர்த்து வைக்க அவர் தயங்குவதில்லை. அவர் உயிருடன் இருந்தால், அவரது அன்பான விவேகத்துடன் கூடியதாக இருக்கும், ஆலோசனையைப் பெற, நாங்களும் பிர்லா மாளிகைக்குச் சென்றிருப்போம். அவர் இறந்துவிட்டதாகக் கருதவே முடியவில்லை.

அதிதீவிரமான முன்னறிவுடன் ஒரு சமயத்தில் அவர் கூறிய மொழிகள் நினைவுக்கு வருகின்றன. தாம் சுட்டுக் கொல்லப்படக்கூடும் என்று அவர் குறிப்பிட்டார். ஆனால் கொன்றவர் யாராயிருந்தாலும் அவர் உண்மைக் காந்தியைக் கொன்றவராகமாட்டார் என்று அவர் சொன்னார். மகாத்மா அன்று சொன்னது சரியே. உண்மைக் காந்தி இருக்கிறார். ஒவ்வொரு இந்தியரின் உள்ளத்தில் மாத்திரமின்றி உலக மக்களின் உள்ளத்திலும் அவர் வாழ்கிறார்.

ஒவ்வொரு பிரச்னையையும் சமரசமாகவும் சமாதானமாகவும் தீர்க்கும் கொள்கையைக் கொண்ட ஐ. நா. ஸ்தாபனத்தைச் சேர்ந்த நாங்கள், எங்கள் இருதயத்திலும் அவர் இருப்பதாகக் கருதுகிறோம். பொது விவகாரங்களிலும் சரி, தனிப்பட்டவர் விஷயங்களிலும் சரி, சமரச மார்க்கமே சன்மார்க்கம் என்ற கருத்துடையவர் அவர்.

---

### இளங்கோவடிகள் திருநாள்

கோம்பை நாடார் க்ஷத்திரியர் சமூகத்தாரின் பொருளுதவியால் ஜுலை 25 உ மாலை ஊர்வலத்திற்குப் பின் இளங்கோவடிகள் திருநாள் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. லால்குடி பேரறிஞர் சரவண முதலியார் அவர்கள் "கண்ணகி எனும் கற்புத் தெய்வம்" என்னும் பொருள் பற்றிச் சொற்பெருக்காற்றினார். பசுமலை நாவலர் சோமசுந்தர பாரதியார் M. A. B. L. அவர்களுக்கு 70 வது ஆண்டு நிறைவு குறித்து பெரு மகிழ்ச்சி தெரிவித்து அவர்கள் இன்னும் பல்லாண்டுகள் வாழ்ந்து தமிழருக்குத் தொண்டாற்ற இறைவனைப் பிரார்த்தித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

# இல்லறமும் இல்லாளும்

—:●:—

(தென்னுப்பிரிக்கா, டர்பன் திரு ச. மு. பிள்ளை)

ஆறறிவுடைய மக்கட் பிறப்பெடுத்தோரனைவரும் கடைப்பிடித் தொழுக வேண்டிய நெறியை அறிஞர்கள் இல்லறம், துறவறம் என இரண்டாக வகுத்திருக்கின்றனர். இவ்விரண்டினுள்ளும் இல்லறமே சிறந்தது. இதன் சிறப்பை 'இல்லற மல்லது நல்லற மன்று,' என்னும் ஔவைப் பிராட்டியார் திருவாக்காலும் "அறதாற்றினில் வாழ்க்கை யாற்றிற், புறத்தாற்றிற் போய்ப் பெறுவதெவன்" என்னும் தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் "தமிழ் மறை" யாலும் பற்பல சான்றோர் மொழிகளாலும் நன்குணரலாம். ஆகவே இல்லறமென்பதென்ன அதற்குரியார் யாவர், அதை நடத்தும் முறையென்ன, அதன் பயன் என்ன என்பதைக் குறித்து ஈண்டு ஆராய்வோம்.

இல்லாளோடு கூடி வாழுமொழுக்கம் இல்லறம் எனப்படும். இல்லாள் இல்லவள், குடும்பினி, மனைவி, வாழ்க்கைத்துணைவி யென்பன ஒரு பொருட் சொற்கள். இல்லறத்துக் குரியார் அன்பிற்றலைச் சிறந்து ஒழுகும் நாயகனும் நாயகியுமே யாவார். இவர்களுள் இல்லறத்தை யினியதாக ஓம்பி அதனைப் பரிபாலிக்குங் கடமை நாயகிக்கே யுரியதாயிருக்கின்றது. இக்காரணத்தாலேயே மேலே குறிக்கப்பட்ட இல்லாள் முதலான பற்பல நாமங்களும் அவளுக்கு வழங்கப்பட்டு வருகின்றன. ஓர் இல்லம் சிறந்து விளங்குதற்குக் காரணம் அவ்வில்லத் தலைவியின் சிறப்புக் குணங்களே. "இல்லாள் அகத்திருக்க இல்லாத தொன்றில்லை" என்னும் பெரியோர் வாக்கும் ஈண்டு கவனிக்கற்பாலது. அன்பு, தயை, இரக்கம் முதலான சகல நற்குணங்களும் அமையப் பெற்ற ஒரு பெண் இல்லத் தலைவியா யிருப்பதில் அவ்வில்லம் எல்லாச் சிறப்பையு மடையுமன்றோ. இனி நம் சகோதரிகள் இன்பவாழ்வை யுடையரா யிருத்தற்கு வேண்டிய முறைகளைக் கவனிப்போம்.

மணம் என்பதை பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தர்வம், அசுரம், இராக்கதம், பைசாசம் என எட்டுவகையாகப் பெரியோர் வகுத்தனர். இவற்றுள் தெய்வ மணமே நம் சமூகத்துள் பெரும்பாலும் வழங்கப்பட்டு வருகின்றது. தெய்வ மணம் என்பது தந்தையும் தாயுமாக ஒரு பெண்ணை அவள் காதலித்த ஒருவனுக்கு அந்தணர் முதலிய பெரியோர் சாட்சியாக வேதவிதிப்படிக் கொடுத்தல். ஆனால் இக்காலத்திற் பெரும்பாலும் காதல் மண மொழிந்து பணத்திற்கும் பிறவற்றிற்கும் ஆசைப்பட்ட மணங்களே நடைபெறுகின்றன.

"காதலரிருவர் கருத்தொக்க ஆதரவு பட்டதே இன்பம்" என்றபடி காதலின் வழிச் செய்யப்படும் மணமே இன்ப மணமாகும். அதுவே இம்மை மறுமை இன்பங்களை அளிக்க வல்லது. காதல் என்பது ஒரு ஆடவனுக்கும் ஒரு பெண்ணுக்கும் இடையிலுள்ள உழுவலன்பு காரணமாக வுண்டாகும் ஒருவிதப்பற்று. அது இவ்விதமென்று ஒருவராற் காட்டற்கரிது. அது "பள்ளத்து வழி வெள்ளம் போல்" ஒருவனிடத்தும் ஒருத்தியிடத்தும் ஓடும். ஆனால் அது கண்டவரிடத்தெல்லாம் ஓடுவதும், பின் மாறுவதுமான அந்த இழி குணமன்று. ஆதலால் உண்மைக் காதலின் வழியே மணஞ் செய்தல் வேண்டும். காதலிலா வழிச் செய்யப்படும் மணங்களால் மகளிர் கற்பு நிலைக்குப் பங்கமும் வர நேரிடும். அன்றெனினும் அவர்களுடைய இல்வாழ்க்கை சிறப்புறுதலுமரிது. இல்வாழ்க்கைச் சிறப்புக் குறைதலினால் இவர்கள் தம் மக்களும் சிறப்புக் குறைந்தவர்களாகவே வருகின்றார்கள். ஆதலினால் உண்மைக் காதலின் வழி மணங்கள் நடைபெறுவதால், உலகத்திற்குப் பற்பல நன்மைகளு முண்டாகு மென்பதற்கு ஆட்சேபமில்லை.

பெண்என்ற சொல்லுக்குப் பொருள் அழகு அல்லவோ! அழகை விரும்பாதார் யார்? கடவுள் உலகைச் சிருஷ்டிக்கும் பொழுதே அழகு சொரூபமாகவே சிருஷ்டித்தார். ஆதலால் உலகம் இயற்கையான அழகையுடையது. உலகத்திலுள்ள சராசரங்கள் யாவும் இயற்கையினாலேயே அழகுள்ளனவும், அழகில்லாதனவு மாகக் காணப்படுகின்றன. உதாரணமாக ஒரு பூந்தோட்டத்தை எடுத்துப் பார்ப்போம். அத்தோட்டத்திலுள்ள புஷ்பங்களும், இலைகளும், தளிர்களும் பிறவும் கண்டார் மனத்தைக் கவரும் அழகுள்ளனவாக இருக்கின்றன. இங்கே அழகைக் கொடுப்பன புஷ்பம் முதலியனவாக இருந்தாலும் ஆராய்ந்து பார்த்தால் தண்ணீர் விடுதல், பசளையிடுதல், களை பறித்தல், முதலான செயற்கை நலனே அழகைக் கொடுக்கின்றன என்று சொல்லலாம். இச்செயற்கை நலன் இல்லாதபொழுது இயற்கை அழகு எங்கே? புஷ்பங்களும் பிறவும் பொலிவிழந்து வாடி அழகு கெட்டிருப்பதை யாவரும் காணலாம்.

ஆகவே இயற்கையழகை விளக்குவது செய்கை அழகு என்பதே யாவரும் ஒப்ப முடிந்த முடிவாகும். இது போலவே இல்லங்கள் சிறப்படைதற்காகப் பெண்களாகிய அழகைக் கடவுள் படைத்திருக்கின்றார். பெண்கள் தத்தம் செய்கை முதலியவற்றாலேயே இல்லங்களைச் சிறப்பித்தல் வேண்டும். இவ்விதமான இயற்கை யழகுஞ் செயற்கை யழகு மொருங்கமையப் பெற்ற இல்லங்களே இன்பமயமான இல்லங்களாகும். இல்லறத்தின் பயன் இன்பமடைதலே.

இன்பம் என்பது இக்காலத்தோரால் பெரும்பான்மையும் இன்பம் எனக் குறிக்கப்படும் சிற்றின்பம் அன்று. பின் என்னை யெனில் அருளும் அன்பும் உடையோராய் விருந்தோம்பல், சுற்றந்தழுவல், மக்களைப் பெறுதல், முதலான திருமங்களைச் செய்து அதனால் வரும் இன்பத்தை யனுபவித்தலே. நம்முன்னோர்களான கற்பிற்கரசியரால் போற்றப்பட்ட இன்ப நெறியதுவே. இந்நெறி நின்றே அவர்கள் மேல் நிலையடைந்தனர்.

> "அறவோர்க் களித்தலும் அந்தணரோம்பலும்
> துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
> விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை"

என்ற கண்ணகியார் வாக்கும் ஈண்டு கவனிக்கத்தக்கது.

ஆகவே நம் சகோதரிகளாம் பெண்மணிகள் இல்லறத்தை நல்லறமாக்கி அதன் வழியொழுகினால் இம்மை மறுமை யின்பங்களை யடைவார்களென்பது திண்ணம்.

---

**தமிழ் மொழி வாழ்க**

---

## கவனர் ஜெனரல்
### ராஜாஜியின் சென்னை விஜயம்

இந்தியா கவர்னல் ஜெனரல் திரு. சி. ராஜகோபாலாச்சாரியார் ஆகஸ்டு 23-ம் தேதி பிற்பகல் 12-30 மணிக்கு திருவனந்தபுரத்திலிருந்து சென்னைக்கு வருகிறார். 23, 24, 25 ஆகிய தேதிகளில் இவர் கிண்டியிலிருக்கும் சர்க்கார் மாளிகையில் தங்கியிருப்பார் 24-உ யன்று சென்னை சர்வகலாசாலை பட்டமளிப்பு விழாவில் பிரசங்கம் செய்வார் 26-உ காலை 8 மணிக்கு நாகபுரிக்குப் புறப்படுகிறார் எனவும் தெரியவருகிறது.

---

### புதுக்கோட்டை
#### நிர்வாகப் பிரச்னை

புதுக்கோட்டையின் எதிர் கால நிர்வாக ஏற்பாடுகள் சர்க்கார் பரிசிலனையிலிருப்பதாயும் இது காரணமாக மதுரை, திருச்சிராப்பள்ளி, ராமநாதபுரம், திருநெல்வேலி, கோயமுத்தூர் ஆகிய ஜில்லாக்களின் எல்லையில் மாறுதல் இருக்குமா என்பதை இப்பொழுது கூற முடியாதென்றும் திரு. ஆர். வி. ஸ்வாமிநாதன் கேள்விக்கு நிதி மந்திரி அசெம்பிளியில் பதிலளித்தார்.

இதே அங்கத்தினரின் ஒரு உப கேள்விக்கு ரெவின்யூ மந்திரி பதிலளிக்கையில் தமிழ் மாகாணம் ஏற்பட்ட பிறகு எல்லைப் பிரச்னையும் புதுக்கோட்டை பிரச்னையும் யோசிக்கப்படுமென்று கூறினர்.

பொதுஜன வாக்கெடுப்பு இருக்காது. பொதுஜனத் தலைவர்கள் அபிப்பிராயம் அறிந்து கொள்ள ஏற்பாடு செய்யப்படு மென்றும் மந்திரி கூறினர்.

---

கைத்தறி ஜவுளி என்று சொல்லி பாகிஸ்தானுக்கு மில் ஜவுளியைக் கடத்த ஏற்பாடு செய்யப்பட்டிருந்த சுமார் 1 லட்ச ரூபாய் பெறுமான 40 பேல்கள் ஜவுளியை வெல்லிங்டன் ஐலண்டு துறைமுகப் போலீஸார் கைப்பற்றி இருக்கின்றனர்.

---

## நோட்டீஸ்

### தேவகோட்டை
#### டி. மு. கோர்ட்டு
S. C. No. 316/47

அதி. சு. அ. சுப. அ. அண்ணாமலை செட்டியார் } வாதி

தேவகோட்டையிலிருக்கும் வீரப்ப செட்டியார் மகன் அள. வீர. அருணாசலம் செட்டியார் } பிரதிவாதி

ஷை பிரதிவாதிக்கு நோட்டீஸ்'-நீர் 19—6—45 உ வாதிக்கு எழுதிக் கொடுத்திருக்கும் பிரும்சேரி நோட்டின் பேரில் வாதி பிருது செய்து 10—8—48 உ வாய்தா யேற்பட்டிருக்கிறது. உமக்கு ஆக்ஷேபணையிருந்தால் ஷை கோர்ட்டில் ஷை தேதியில் பகல் 10 மணிக்கு ஆஜராகி தெரிவித்துக்கொள்ளலாம். தவறினால் உம்மை எக்ஸ்பார்ட்டி செய்து தீர்ப்புச் செய்யப்படும் என்பதை இதன் மூலம் அறிவித்திருக்கிறது.

K. வரதன்
வக்கீல்

தேவகோட்டை
29—7—48



# சோவியத் இராஜதந்திர நடவடிக்கையின் போக்கு

பிரிட்டன் பிரான்ஸ் அமெரிக்கா ஆகிய நாடுகளுக்கு சமீபத்தில் சோவியத் ரஷ்யா அனுப்பியுள்ள பதிலின் தொனியும் சாராம்சங்களும்—மாஜி பிரஞ்சுப் பிரதமர் ஷுமான் அறிவித்தபடி, 'எதிர்பார்த்த' விதத்திலேயே உள்ளன. ஏனெனில் அவை சோவியத் அரசாங்கத்தின் இராஜதந்திர போக்கிற்கு முற்றிலும் பொருத்தமாகவே அமைந்துள்ளன. அத்துடன் சோவியத் அரசாங்கத்தின் போக்கு இரண்டாம் உலக மகாயுத்தத்திற்கு முன்னர் நாம் பிரத்யட்சமாகக்கண்ட ஒரு முறையின் மாதிரியிலேயே அமைந்திருக்கிறது.

முதலாவதாக கஷ்டங்களைக் கொடுக்கக் கூடியதும் அபாயகரமான நிலைமையை அறைகூவி அழைப்பதுமான தொரு நெருக்கடி வேண்டுமென்றே உற்பத்தி செய்யப்படுகிறது. இதன் காரணமாக சமாதானத்தையே நாடி நிற்கும் மக்களின் மனதில் கலக்கம் ஏற்படுவதுடன் மீண்டும் யுத்தம் ஏற்படக்கூடுமோவென்ற அச்சங்களும் கிளம்புகின்றன. ரஷ்யா கையாளும் இக் கொள்கை அத்துடன் மட்டும் நின்றுவிடுவதில்லை. நெருக்கடி நீடிக்கப்படுவதால் அநேக லட்சக்கணக்கான மக்கள் துன்பங்களுக்கும் கஷ்டங்களுக்கும் ஆளாகின்றனர். ரஷ்யாவின் இம்முறையை ஹிட்லர் கூட நினைத்ததில்லை யென்று கூறலாம்.

நெருக்கடி நீடித்து மக்கள் கஷ்டப்படக்கூடிய கட்டம் எய்தியதும் சமரசத்திற்கு வருவது சுலபமேயென்ற பேச்சுகள் கிளம்புகின்றன. எதிர்தரப்பினர் கண்யமாகவும் நியாயமாகவும் ஒரு மகாநாடு கூட்டுவதற்கு சம்மதப்பட்டால் ஒரு உடன்பாடு ஏற்படுவதற்கான வழி துறைகளை வகுத்து யுத்த பீதியையும் மக்களின் துயரத்தையும் போக்க முடியுமென்று குறிப்பாக உணர்த்தப்படுகிறது. சமரசம் ஏற்பட இருதரப்பினரிடையேயும் விட்டுக் கொடுக்கக் கூடிய மனப்பான்மை மிக அவசியம், எனினும் சோவியத் ரஷ்யாவின் அகராதிப்படி சமரசம்என்பதற்கு முதலில் சோவியத் அரசாங்கத்தின் கோரிக்கைகளை இதர பிரச்னைகளை ஒத்தி வைப்பதற்கு கைமாறாக ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பது தான் பொருள் என்பதையும் நாம் அறிந்திருக்க வேண்டும். மியூனிச் மகாநாட்டில் ஹிட்லர்கூட செக்கோஸ்லேவாகியா முழுமையையும் வேண்டுமென்று கேட்கவில்லையே!

'ஜெர்மனி சம்பந்தப்பட்ட வரை நான்கு வல்லரசுகளின் ஆதிக்கம் பற்றிய பொது பிரச்னை'களை எவ்வித நிபந்தனையுமின்றி விவாதிப்பதற்கு சோவியத் அரசாங்கம் தயார் என சோவியத் பதிலில் கண்டிருப்பதை பொதுவாக முற்றிலும் நியாயமானதென்றே கூறுவர்.

ஆனால் உண்மையில் இதற்கு ஏதேனும் அர்த்தமிருக்கிறதா? கடந்த வருடம் முறிந்துபோன சம்பாஷணைகளின்போது விவாதிக்காத பிரச்னை இனியும் வேறு இருக்கிறதா? ரஷ்யாவின் விருப்பம்தான் என்ன? என்ற கேள்வி நம் உள்ளத்தில் எழுவது இயற்கையே.

மேற்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பதும் மிக இலகுவான காரியம்தான். சோவியத் அரசாங்கம் விரும்புகிறபடி மகாநாடு கூட்டப்பட்டால், அது மேற்கு நேச தேச நாடுகளின்மீது வழக்கமான வசைபுராணம் படிப்பதற்கு ஒரு சந்தர்ப்பம் அளிக்கும். அத்துடன் 'சமரசம்' ஏற்படுவதற்கான ஒரு வெகுமதியாக மேற்கித்திய நேச நாடுகள் சோவியத் ரஷ்யாவின் சில கட்டாயமான நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டு அதன்படி நடக்கவும் சித்தமாயிருக்கவேண்டும். ஒரு வேளை அந்நிபந்தனைகளில்—சமரசம் என்று காட்டுவதற்கான தோரணையில்—சில இடங்களில் சிறிது மாற்றங்களைச் செய்ய ரஷ்யா சம்மதிக்கலாம்.

சோவியத் ரஷ்யாவின் உடனடியான நிபந்தனைகள் என்னவென்பதை அது அனுப்பியுள்ள குறிப்பிலிருந்தே நாம் ஊகிக்க முடிகிறது. முதலாவதாக பெர்லின் நகரிலுள்ள நான்கு வல்லரசுகளின் கட்டுப்பாடு கவுன்ஸிலுக்கே முற்றுப் புள்ளி வைத்துவிட்டு நகர் முழுமையும் அரசியல் பொருளாதார நீதிகளில் சோவியத் மண்டலத்துடன் இணைத்துவிட வேண்டுமென ரஷ்யா கேட்கலாம். அத்துடன் சமரசத்திற்கு அறிகுறியாக சோவியத் சேனாதிபதியின் அனுமதியின்பேரில் பிரிட்டிஷ், அமெரிக்க, பிரஞ்சுப் படைகளின் 'சின்னமாக' சில ராணுவப் பகுதிகளை பெர்லின் நகரில் வைத்துக்கொள்ள ரஷ்யா அங்கீகரிக்கலாம்.

மேற்கு மண்டலங்களில் இவ்வருடம் எடுக்கப்பட்டுள்ள அரசியல் பொருளாதார நடவடிக்கைகளை மேற்கு நேச தேச நாடுகள் கைவிட வேண்டுமென்பது ரஷ்யாவின் இரண்டாவது நிபந்தனையாக இருக்கலாம். ஏனெனில் இதன் காரணமாக மேற்கு மண்டலங்களின் பொருளாதார நிலைமை சீர்குலைந்து விடுமாதலால் கிழக்கு மண்டலத்தில் சக்தியுடனிருக்கும் ரஷ்யா சமயம் வாய்த்தவுடன் அவைகளை விழுங்க இலகுவாகும்.

மேற்கு மண்டலத்தில் ரஷ்யர்களுக்கு நடவடிக்கைகள் எடுப்பதற்குச் சாதகமாகயிருக்கும் தனமானரூர் பிரதேசத்தை நான்கு வல்லரசுகளின் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டுவரவேண்டுமென்பது ரஷ்யாவின் மூன்றுவது நிபந்தனையாக இருக்கலாம். கிழக்கு மண்டலத்தில் மேற்கு நேச தேசத்தவரை அடியெடுத்து வைக்கக்கூட சம்மதிக்காத ரஷ்யர்கள் மேற்கு மண்டலத்தில் ஒரு தளம் பெறுவதில் ஆவல் கொண்டுள்ளது இயற்கைதானே!

மேற்கூறிய நிபந்தனைகளில் ஒருசில அமல் நடத்தப்பட்டாலும் ரஷ்யாவுடன் சமரசம் ஏற்படவேண்டுமே என்ற காரணத்திற்காக இதர மூன்று வல்லரசுகள் அவைகளுக்கு இணங்கிவிட்டாலும் அதன் மூலம் ரஷ்யாவுக்குத்தான் நேரடியாகவும் மறைமுகமாகவும் அதிகமான பலன்கள் கிடைக்கும். ஏனெனில் அது சோவியத் ரஷ்யாவின் கீர்த்தியை உயர்த்தும்; மேற்கு ஐரோப்பாவின் கௌரவம் ஜெர்மனி முழுவதிலும் இருந்த இடம் தெரியாமல் போய்விடும். அவைகளைக் கண்டு சாதாரண மக்கள் என்ன கூறுவார்கள்? "சரித்திர ரதத்தின் சக்கரங்கள் சுழன்று சுழன்று வருகின்றன; இச்சமரச உடன்பாடு ஏற்பட்டுத்தான் ஆக வேண்டும்; இல்லையேல் யுத்தம் என்ற மற்றொரு பாதைதான் உள்ளது. ரஷ்யாவின் கடைசி கோரிக்கையையும் மேற்கு வல்லரசுகள் ஏற்றுக்கொண்டுள்ளதால் இனி பொருளாதார அபிவிருத்திகள் வெகுவேகமாக ஆரம்பமாகிவிடும்" என்று என்னுவார்களே தவிர ரஷ்யாவின் அந்தரங்க நோக்கம் என்னவென்பதைச் சிந்தித்தும் சிந்திக்கமாட்டார்கள். மக்களின் மனத்தை மாற்ற சோவியத் ரஷ்யா ஆலோசித்து வரும் இம்முறை ஹிட்லர் கையாண்ட ஒரு முறையின் 'மாதிரி'தானென்பதை நாம் இங்கு ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும்.

ரஷ்யா கையாளவிருக்கும் இப்புது இராஜதந்திர நடவடிக்கையின் அமைப்பு எவ்வாறிருக்குமென்பதை வார்ஸா மகாநாட்டிலிருந்து நாம் ஊகித்துக்கொள்ளலாம். இம்மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட 'பூரண ஆயுதபரிகாரணம்' என்ற தீர்மானத்திற்கு மேற்கு ஜெர்மனியிலுள்ள சகலவிதமான தற்காப்புகளையும் அகற்றிவிட வேண்டுமென்றுதான் நாம் பொருள் கொள்ளவேண்டும். ஏனெனில் கிழக்கு ஐரோப்பாவில் சகலவிதமான நடவடிக்கைகளும் இரகசியமாக நடைபெற்று வருவதால் தன் மண்டலத்தில் பூரண ஆயுதபரிகாரணம் அமுல் செய்துவிட்டதாக ரஷ்யா வெளி உலகத்திற்குக் காட்ட முடியும், 'சகல வல்லரசுகளின் ஆக்கிரமிப்புப் படைகளும் ஜெர்மனியிலிருந்து வாபஸ் செய்யப்படவேண்டும்' என்று கூறுகிறது இரண்டாவது தீர்மானம். இவை இரண்டும் அமல் செய்யப்பட்டால் ரஷ்யாவின் இறுதியான நடவடிக்கைகளுக்கு ஜெர்மனி தயாராகிவிடும். இதற்கென சோவியத் மண்டலத்தில் கம்யூனிஸ்ட் மாஜி நாஜிகள் ஆகியோரைக் கொண்ட ராணுவப் படைகள் தற்போது நிறுவப்பட்டு வருகின்றன. அவசியம் ஏற்படின் போலந்தும் செக்கோஸ்லேவாகியாவும் இவகுவில் சர்ச்சை செய்து கொள்ள முடியும். அதைக் காரணமாகக் கொண்டு சோவியத் ரஷ்யா தலையிட முடியும். அல்லது இன்னும் எவ்வளவோ வழிகள் உள்ளன. ஹிட்லர்தான் அநேக மாதிரிகளை விட்டுச் சென்றிருக்கிறாரே! ஏதாவது ஒரு சாக்குப் போக்கு கூறி 'மக்களின் நாயக' மென்று தம்பட்டமடிக்கும் ரஷ்யப் படைகள் தங்களுடைய நடவடிக்கைகளை ஆரம்பிக்க முடியும். இதைத் தடுத்து நிறுத்தவோ அல்லது எதிர்க்கவோ பிரஞ்சு எல்லைவரை வேறு சக்தி எதுவுமில்லை. ஆகவே, ரைன் நதிக்கு மேற்கே 'இரும்புத்திரை விழுந்துவிடும். ஜெர்மனியும் மாஸ்கோ சாம்ராஜ்யத்திற்குள் வந்துவிடும். இதே நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டுதான் ரஷ்யாவின் இராஜ தந்திரப்போக்கு அமைந்திருக்கிறது.

ஹிட்டலரின் 'மகாதிட்டம்' 1933ல் எவ்விதம் நமக்குத் தோன்றியதோ அதேபோல் என்னுடைய ஊகங்களும் விநோதமான திட்டங்களென்றே தோன்றலாம். ஆனால் ஜுலை 14 உ சோவியத் ரஷ்யா அனுப்பியுள்ள குறிப்பிலும் வார்ஸா மகாநாட்டுத் தீர்மானங்களிலும் ரஷ்யாவின் இப் 'பெரிய திட்டம்' தான் மறைந்து கிடக்கிறதென்பதை நாம் நன்கு காணமுடியும்.

(லண்டன் "டெய்லிஹெரால்டு" பத்திரிகையின் இராஜதந்திர நிருபர் டபிள்யூ— என். நவர்.)

---

### ஜமீன்தாரி ஒழிப்பு மசோதா

ஜமீன்தாரி ஒழிப்பு மசோதா ஆகஸ்ட் 10-ந் தேதி கூடப்போகும் சட்டசபைக் கூட்டத்திலேயே விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளப்படும் என்று தெரிகிறது.

# குமரன்

காந்தி ஆண்டு 79, ஆடி மீ 22-உ


## ஹிந்தி

தமிழ்நாட்டில் ஹிந்தி மொழிப் பயிற்சியைப் பற்றிய கிளர்ச்சி பெருகி வருகிறது. ஆங்கில ஆட்சி யிருந்தவரை ஆங்கிலம் கற்பது இன்றியமையாததென்று ஆங்கிலேயரும் சொல்லினர். மக்களும் அப்படியே காலக்கிரமத்தில் நம்பிவிட்டனர். நூற்றாண்டுகள் இப்படிப்பட்ட நினைவு வளர்க்கப்பட்டதால் இன்னும் பலர் ஆங்கிலம் இன்றியமையாததென்று கூறிநிற்பதைக் காண்கிறோம். ஆங்கிலேயர் போய்விட்டனர். ஆங்கிலமும் தலை சாய்ந்து விட்டது. அதை நிறுத்திக் காப்பாற்றுவது முடியாத காரியம்.

அந்த ஸ்தானத்தில் 'ஹிந்தி' வருமென்று கருதப்படுகிறது. வருமானால் தமிழக மக்களும் கட்டாயம் பயிலவேண்டுமென்பது எழுந்திருக்கிற பிரச்னை. இதைக் கட்டாய பாடமாக்கக் கூடாதென்பது எதிர்வாதம்.

ராஜாஜி மந்திரிசபை உள்ள போது ஹிந்தி சில பள்ளிக்கூடங்களில் கட்டாயப் பாடமாக்கப்பட்டது. அதை யெதிர்த்தனர். இயக்கம் வலுத்தது. பலர் சிறை புகுந்தனர். அதை அறிந்திருந்தும் இன்று இந்நிலையைக் கட்டாய பாடமாக்க அரசாங்கம் முற்பட்டிருக்கிறது. கல்வித் துறையில் முன்னிற்கும் அதிகாரிகள் நிலைமையை அறிந்து பொறுமையுடன் காரியங்களைச் செய்தல் வேண்டும். இரண்டாவது பாரத்தில் படிக்கிற ஒரு மாணவன் மூன்று மொழிகளைக் கட்டாயமாகப் படிக்கவேண்டியிருக்கிறது. ஒரு 10 வயதுள்ள சிறுவன் கையில் மூன்று இலக்கண புத்தகமிருப்பதைக் கண்டோம். தமிழ், வடமொழி, ஆங்கிலம் இம்மூன்று இலக்கணங்களை அவன் வைத்துக் கொண்டு குழம்புவதைத் தவிரப் படிப்பதற்கில்லை. ஒன்றல்லாதது பல; இரண்டல்லாதது பல. மேஜை போனுள், பேனு வந்தான், பசு போனுள், எருது வந்தான், இப்படி மூன்று வேறுபட்ட இலக்கணங்களைப் படித்துச் சிறுவர் உரு முடியாது. குழப்பந்தான் மிஞ்சும். மொழிக்கொரு உபாத்தியாயர் இருக்கலாம். பிள்ளையும் பெற்ருேரும் விரும்புகிற மொழியைக் கற்க வழி விடலாம். ஹைஸ்கூல் ஆரம்பத்தில் மூன்று மொழிகளை வைத்து வாட்டுதல் முறையல்ல. ஆங்கிலத்தையும் இரண்டாம் மொழி வரிசையில் சேர்த்து விட்டால் இந்தக் குழப்பங்களும் எதிர்ப்பும் ஒழிந்து போதல் கூடும். தமிழோடு ஏதாவதொரு மொழியை கட்டாயம் படித்துத்தான் தீர்வார்கள்.

ஹிந்தியை எதிர்ப்பவர்க்கு இரண்டொரு வார்த்தை. தமிழ் நாடு தனி முடி ஒச்சிய நாள் முந்திப்போய்விட்டது. அப்படி இனி ஒச்சும்நாள் சமீபத்தில் வரட்டும், நல்லதுதான். இன்றைய உலக நிலையில் சிறுசிறு பகுதியாக நின்று தனியரசு நடத்துவது செல்லுபடியாகாத காரியமாக இருப்பதை அறிகிருேம். பால்கன் நாடுகளும் ஐரோப்பாவிலுள்ள மற்ற சிறு நாடுகளும் படுகிற அவதியை அறிகிருேம். உலகில் ரஷ்யா, அமெரிக்கா இரண்டேதான் நாடுகள். பிரிட்டன் அமெரிக்காவைத் தொட்டுக்கொண்டு நிற்கிறது. அல்லது பெரிய 'காமன் வெல்த்'பரப்பு அதன் முதுகைத் தாங்கி நிற்கிறது. பரந்த ஐக்கிய பாவமுள்ள தேசங்கள்தான் இனி நிமிர்ந்து நிற்க முடியும். இந்தியா முழுமையும் ஒரே நாடாக இருப்பதே உலகின் முன் நின்று வாழும் வழியாகும். அப்பொழுது அதற்கு ஒரு மொழி தேவை. அது தமிழாக இருக்கட்டும் என்று சொன்னால் அது எமக்குக் களிபேருவகை தருவதாகும். அது நடவாத காரியம். எட்டுக்கோடி பேர் பேசுகிற ஹிந்தி ஆகாதென்ருல் இரண்டரைக்கோடிப் பேர் பேசும் தமிழ் வருமென்று எதிர்பார்ப்பது விகடக் கூத்தேயாகும். இதொருபுறமிருக்கட்டும்.

தமிழக மக்கட்கு நாம் கூறுவதொன்று. ஹிந்தியைப் படியுங்கள்! முடிந்த மட்டும் படியுங்கள்! கட்டாயப் பாடமானுலும் சரி, அல்லவாயினும் சரி, ஹிந்தியை விரைவாகக் கற்றுக்கொள்ளுங்கள்! ஏமாந்துபோக வேண்டாம். மத்திய அரசாங்கம் ஹிந்தியில்தான் நடக்கும். அங்கே செல்வாக்கடைய வேண்டியது அவசியமாகும். அதைத் தவிர வடநாடு முழுமையும் தமிழ் மக்கள் குடியேறி உத்யோகங்களையும், வியாபாரத்தையும், கைத் தொழிலையும் கைப்பற்றி ஆகவேண்டும். வடநாட்டில் தமிழனுக்கு ஆதிக்கம் வேண்டுமென்ருல் வடநாட்டு மொழி தெரியவேண்டும். தமிழ்மொழி வடக்கே பரவவேண்டுமென்ருலும் வடநாட்டில் நம்முடைய ஆதிக்கம் உரம் பெற்றிருக்கவேண்டும். மலாயாவில் வர்த்தகம் செய்பவன் மலாய் மொழியைக் கற்றுக் கொண்டுதான் செல்ல வேண்டும். பர்மா செல்பவனும் பர்மிய மொழியைக் கற்றிராவிட்டால் அங்கே அவன் செல்லாக்காசுதான். அன்னிய தேசத்திலும் அப்படியே. ஆங்கிலந் தெரியாதவன் அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் ஒன்றுக்கும் உதவாக்கரையாக நிற்கவேண்டியதைத் தவிர வேறெதற்காவான்?

வடநாட்டில் தமிழன் ஆதிக்கம் வேண்டுவது மிகவும் நியாயம். 'வடநாட்டான் நம்மை அழுத்துகிருன்; ஏறி மிதிக்கிருன்; வியாபாரத்தையெல்லாம் பிடித்துக் கொண்டான்; பிர்லா, டாடா, டால்மியாக்கள் கம்பெனிகளை வைத்து வாட்டுகிருர்கள்'. இப்படியெல்லாம் போடும் கூச்சல் வீண் கூச்சலாகிவிடவேண்டாம், பயன் பெறட்டும் என்பதே நமது கருத்து. இன்று தமிழ் நாட்டில் உள்ளவர் இயன்றமட்டும் ஹிந்தியைப் படித்தாகவேண்டும். அவசரமாகவும் படிக்கவேண்டும். தமிழ் நாட்டுத் தலைவர்களே! தமிழ் அபிமானிகளல்ல—தமிழ்நாட்டில் அபிமானமுள்ளவர்களே! நம் பிள்ளைகளைக் கண்டு வட நாட்டார் கலங்கவேண்டும். இது செய்ய முடியாத காரியமல்ல. இன்றுள்ள தமிழ் சகோதரர்கள், "வடநாட்டான் தொல்லை செய்கிருன். அவனை விரட்டவேண்டும்" என்று போடுகிற கூப்பாடு இன்னும் 20 ஆண்டுகளிலாவது 'தமிழன் தொல்லை செய்கிருன், துரத்து, துரத்து, இல்லாவிட்டால் நமது பிழைப்பு போய்விடும்' என்று வடநாட்டார் கதறவேண்டும். வடநாட்டில் சென்று வேரூன்றுதற்கு 'ஹிந்தி' அவசியம். தமிழ் மக்கள் சென்ற சில நூற்றாண்டுகளாக வெளி நாடுகளில் சென்று பட்டிருக்கிற கஷ்ட நஷ்டங்கள் கொஞ்சமல்ல. எதிர்காலத்தில் வெளிநாட்டு எண்ணத்தை மறக்க வேண்டியதுதான். இனி நமக்குத் தொழில் செய்யுமிடம் வடநாடுதான் என்பதை ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும். அங்கிருந்து நம்மைத் துரத்த முடியாது. முடியுமானுல் அன்றுதான் தமிழ் நாடு உண்மையான தனிநாடாகும்.

### சென்னை 'அசோக விஹார்' பற்றி பண்டித நேரு

சென்னை கார்ப்பொரேஷனுல் பீபிள்ஸ் பார்க்கில் நடத்தப்படும் 'அசோக விஹார்' என்னும் சுகாதார பொழுது போக்கு நிலையம் பற்றி இந்திய டொமினியன் மந்திரி பண்டித ஜவஹர்லால் நேரு மிகுந்த சிரத்தை காட்டுகிருர்.

மாதம் ஒரு அணுவுக்கு மேற்படி நிலையத்தில் ஏழைகளுக்கு வைத்திய உதவி, பொழுது போக்கு முதலிய வசதிகள் உள்ள இம்மாதிரி நிலையம் ஒவ்வொரு முனிசிபாலிட்டியாலும் நடத்தப்படவேண்டும் என்றும், இவ்விஷயத்தில் இந்தியாவிலுள்ள முனிசிபாலிட்டிகளுக்கு சென்னை கார்ப்பொரேஷன் வழி காட்டுவதாகவும் பண்டித நேரு டில்லியில் ஒரு மகாநாட்டில் பேசுகையில் பாராட்டினர். அசோக விஹார் பற்றிய விவரங்கள் அடங்கிய புஸ்தகங்களைத் தயாரித்து தமக்கு அனுப்புமாறு பண்டித நேரு கேட்டுக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. இதற்கிணங்கி மேற்படி நிலையம்பற்றிய விவரங்கள், படங்கள் கொண்ட புஸ்தகங்களை ஏராளமாக அச்சிட்டு அனுப்பக் கார்ப்பொரேஷன் கமிஷனரும், சுகாதார அதிகாரியும் ஏற்பாடு செய்து வருகின்றனர்.

### இரு டொமினியன்களிலிருந்தும் பிரிட்டிஷ் ஆபீஸர்கள் வாபஸ்?

காஷ்மீர் முனையில் இந்தியா, பாகிஸ்தான் படைகள் கை கலப்பு அதிகார பூர்வமாக அறிவிக்கப்பட்டபடியால், இரு டொமினியன்களிலுமுள்ள பிரிட்டிஷ் ராணுவ ஆபீசர்களை வாபஸ் பெறுவது பற்றி பிரிட்டன் ஆலோசித்து வருகிறது. இந்தியாவில் உள்ளதைவிட அதிக பிரிட்டிஷ் ஆபீசர்கள் பாகிஸ்தானில்தான் இருக்கின்றனர். போரில் பிரிட்டிஷ் அதிகாரிகள் பெரும் பங்கு எடுத்துக் கொள்ளாவிடினும் இரு தரப்பிலும் காஷ்மீர் போருக்காகத் திட்டமிடுவதிலும், படைகளுக்குப் பயிற்சி அளிப்பதிலும் அவர்கள் பிரதான பங்கெடுத்துக் கொள்கின்றனர். இவர்களை வாபஸ் பெறுவதில் சில சிக்கலான பிரச்னைகளுமுள்ளன.

இரு டொமினியன்களிலும் சேவை செய்யும் பிரிட்டிஷ் ஆபீசர்களில் பெரும்பாலோர் 3 ரகத்தைச் சேர்ந்தவர்கள். இந்தியா, பாகிஸ்தான் ராணுவங்களுக்கு இரவல் கொடுக்கப்பட்ட பிரிட்டிஷ் ராணுவ டெக்னீஷன்களும், இதர ஆபீசர்களும் முதல் ரகத்தைச் சேர்ந்தவர்கள். இவர்களைச் சுலபமாக வாபஸ்பெற முடியும். ரிட்டையர் ஆவதற்கு முன்பு நீண்ட கால ரஜாவில் இருந்து கொண்டு இரு டொமினியன் ராணுவத்திலும் சேவை புரியமுன் வந்த இந்திய ராணுவத்தைச் சேர்ந்த பிரிட்டிஷ் ஆபீசர்கள் 2-வது ரகத்தைச் சேர்ந்தவர்கள். பென்ஷன் பெறும் மாஜி இந்திய ராணுவத்தினர் சிலர் டொமியன் ராணுவத்தில் சேர்ந்துள்ளனர். இவர்கள் 3-வது ரகத்தைச் சேர்ந்தவர்கள். ஸ்டர்லிங் ஐவேஜி ஒப்பந்தப் பிரகாரம் டொமியன்களிடமிருந்து இவர்களுக்குப் பென்ஷன் கிடைப்பதால் இவர்களை வாபஸ்பெறுவது அவ்வளவு சுலபமல்ல. இந்தியா, பாகிஸ்தான் ராணுவங்களில் பிரிட்டிஷார் சேவை புரிவதை சில விதிகள் கட்டுப்படுத்துகின்றன. அவசியமானுல் அவர்களை வாபஸ் பெறலாமென டொமினியன்களுடன் பிரிட்டன் உடன்பாடு வேறு செய்து கொண்டிருக்கிறது.

### கிராமப் புனருத்தாரணம் பற்றி

மந்திரி திரு குருபாதம் கருத்து

பிர்க்கா அபிவிருத்தி, மதுவிலக்கு மந்திரி திரு குருபாதத்திற்கு ஜூலை 31 உ மாலை சென்னை மவுண்ட்ரோடு ராஜாஜி ஹாலில் சென்னை கிருஸ்தவர்கள் ஒரு உபசாரம் நடத்தினர்கள். பிரதமர் திரு ஓமந்தூர் ரெட்டியார், டாக்டர் டி. எஸ். எஸ் ராஜன் முதலிய பல பிரபலஸ்தர்கள் வந்திருந்தனர்.

பாராட்டுகளுக்கு மந்திரி திரு குருபாதம் பதிலளிக்கையில், தாம் இந்தியக் கிருஸ்தவர்களின் பிரதிநிதிமட்டுமல்லாமல் இந்திய சமூகத்தின் பிரதிநிதி என்றும், இந்தியாவின் ஜனங்களில் அவர்கள் எந்த மதத்தினராயினும் சரி, 90 சதவிகிதத்தினர் கிராமவாசிகள் ஏழை விவசாயிகள் என்றும் இப்பரந்த நாட்டிலுள்ள ஜன சமூகத்துக்கு தாம் சேவை செய்தால், கிருஸ்தவர்கள் உள்படத்தான் சேவை செய்வதாகும் என்றும், தாம் ஏழை மக்களின் பிரதிநிதி என்றும் கிருஸ்துவர்கள் தங்களது குறுகிய மனோபாவத்தை விடுத்து தாங்கள் இந்திய சமூதாயத்தை சேர்ந்தவர்கள் என்பதை உணரவேண்டுமென்றும், எல்லா சமூகத்தினரும் ஒற்றுமையயிருக்கப் பாடுபடவேண்டும் என்றும் கூறினர். மேலும் நெடுங்காலமாக கிருஸ்துவர்களாகிய நாம் மிஷனரிகளின் ஆதிக்கத்திலும் பாதிரிமார்களின் ஆதிக்கத்திலுமிருந்துவந்திருக்கிருேம். ஆகையால் தனி சமுதாயமென்று நம்மை நாம் கருதி வந்துள்ளோம். நாம் இந்திய சமூதாயத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை நாம் உணர்ந்து நாட்டில் ஒற்றுமைக்குப் பாடுபட வேண்டும். நான் அரசியல் வாதி யல்ல. நிர்மணாத் திட்டத்திலேயே நான் நாட்டம் கொண்டுள்ளேன். கிராம புனருத்தாரணப் பிரச்னை இதுவரை அணுகப்படாத புது விதத்தில் தீர்க்கப்படவேண்டும். கிராமங்களிலுள்ள கிருஸ்துவர்களுக்குப் பாதிரிமார்கள் உதவி செய்தால் இது தீர்ந்துவிடாது. கிராம மக்களை வருக்கும் உணவு, உடை, வீட்டு வசதி முதலிய வசதிகள் செய்தால்தான் கிராமங்களின் நிலைமையை மேன்மைப்படுத்த முடியும். கிராமவாசிகள் க்ஷேமமடைந்து சந்தோஷமடைந்தால்தான் சுதந்திர மடைந்ததன் பலனை அனுபவிக்க முடியும்.

### விவேகானந்தா வாசகசாலை இராயவரம்

பதின்மூன்றுவது ஆண்டுக்கு திரு. மு. அ. மு. முத்துராமன் செட்டியாரவர்களைத் தலைவராகவும், திரு. ஏ. சோலையப்பன், திரு லெ. டி. முத்தையா அவர்களை கூட்டுக் காரியதரிசிகளாகவும், திரு. எஸ். பி. சுப்பையா அவர்களை உபதலைவராகவும், திரு. ஏ. கே. ஏ. ஆர். அருணசலம் அவர்களை பொக்கிஷதாரராகவும், தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறது.

### கீழச்சிவற்பட்டி

தமிழ் உரிமைக் கழகத்தார் ஜூலை 29 உ மாலையில் நாவலர் சோமசுந்தர பாரதியாரின் எழுபதாண்டு விழாவையும், கவிமணி தே. வி யின் எழுபத்து மூன்றுவது ஆண்டு விழாவையும் கொண்டாடினர்கள். திரு. ராம. சேதுராமன் செட்டியார் தலைமையில் 'அணிகலம்' ஆசிரியர் கதிரேசன் செட்டியார், இளவரசன் கா. நடராஜன் முதலானவர் பேசினர். தமிழ் வாழ்த்துடன் கூட்டம் முடிவுற்றது.



### ஹிந்துஸ்தானி கட்டாய பாஷையல்ல

சென்னை சர்க்கார் அறிக்கை யொன்று கூறுவதாவது:- ஹிந்துஸ்தானி பற்றி சர்க்கார் கொள்கை சம்பந்தமாக பொது மக்களிடையே தப்பபிப்பிராயம் நிலவியிருப்பதாகத் தெரிகிறது. செகண்டரி பள்ளிகளில் ஹிந்துஸ்தானி கட்டாய பாஷையாக ஏற்படுத்தப்பட்டிருப்பதாகவும், இப்பாஷையை ஒவ்வொருவரும் கற்றுக்கொள்ள வேண்டுமென்றும் பொது மக்கள் நினைக்கின்றனர். ஆனுல் உண்மை நிலைமை இதற்கு மாருக விருக்கிறது. ஹிந்துஸ்தானி இந்தியாவின் பொது பாஷையாக இருக்கப்போவதால் இதை எவ்வளவு பேர்கள் கற்றுக்கொள்ள முடியுமோ அவ்வளவு பேர்கள் கற்றுக்கொண்டால் அவர்களுக்கு நன்மை ஏற்படும் என்று சர்க்கார் உணருகின்றனர். ஆனுல் இப்பாஷையைக் கற்றுக்கொள்ள விரும்பமில்லாதவர்கள் இதை கற்க வேண்டுமென்று சர்க்கார் நிர்ப்பந்தப்படுத்த விரும்பவில்லை. இந்தக் காரணத்தினுல்தான் ஹிந்துஸ்தானி இரண்டாவது பாஷை பிரிவில் சேர்க்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது பாஷைப் பிரிவில் ஒரு மாணவன் ஹிந்துஸ்தானியோ, சமஸ்கிருதமோ, அராபியோ அல்லது மற்ற எந்த இந்திய பாஷையையோ எடுத்துக்கொள்ளலாம். இரண்டாவது பாஷை பிரிவில் ஒரு குறிப்பிட்ட பாஷையை அவன் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கட்டாயப்படுத்தப்படவில்லை. ஹிந்துஸ்தானியோ, சமஸ்கிருதமோ, அராபியோ அல்லது எந்த இந்திய பாஷையையோ கற்றுக்கொள்ள விரும்பும் மாணவர்களுக்கு வசதியாகவே இந்த பாஷைகள் இரண்டாவது பாஷை பிரிவில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. தமிழ் நாட்டிலிருக்கும் சிலர் தங்களது தாய்பாஷை அல்லது பிரதேச பாஷையாக விருக்கும் தெலுங்கு கன்னடம் அல்லது மலையாளம் இவற்றை கற்பதற்கு சந்தர்ப்பமளிக்க வேண்டுமென்று நினைக்கின்றனர். இதே போல் மற்ற பிரதேசங்களிலிருப்போர்கள் மற்ற பாஷைகளை கற்கவேண்டுமென்ற விருப்பத்தைத் தெரிவித்திருக்கின்றனர். அவர்களுக்கு இப்புதிய ஏற்பாடு மிகவும் உதவியாக விருக்கும். ஆகவே ஹிந்துஸ்தானி கட்டாய பாஷையாக இல்லாமலிருந்தபோதிலும் இரண்டாவது பாஷை பிரிவில் ஒரு பாஷை கட்டாயமாக விருக்கும். இப்புதிய திட்டத்தில் பிரதேச பாஷைக்கு ஒரு உயர்ந்த ஸ்தானம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனுல் பழய திட்டத்தில் பிரதேச பாஷை ஆங்கிலத்திற்கு கீழ்ப்பட்டிருந்தது. பிரதேச பாஷை தற்போது முதல் பாஷையாக ஏற்படுத்தப்பட்டிருப்பதுடன் நில்லாமல் எல்லா செகண்டரி பள்ளிகளிலும் பிரதேச பாஷைமூலம் கல்வி போதிக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. கூடிய சீக்கிரத்தில் கல்லூரிகளிலும் பிரதேச பாஷை மூலம் கல்வி போதனை ஏற்படுத்தப்படலாம். பிரதேச பாஷையில் நிர்வாகம் நடத்தவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இம்முறை 2 ஜில்லாக்களிலும் பரிட்சார்த்தமாக ஏற்படுத்தப்பட்டுவிட்டது. இதன் காரணமாக பிரதேச பாஷைகளின் கௌரவமும் அந்தஸ்தும் உயர்வதுடன் நில்லாமல் அவைகள் அபிவிருத்தியும் அடையும். இந்தக் காரணத்தினுல் இந்துஸ்தானி அல்லது மற்ற எந்த இரண்டாவது பாஷை கற்பதற்கு வசதியளிப்பது எந்த விதத்திலும் பிரதேச பாஷையின் வளர்ச்சியைப் பாதிக்கும் என்று கூறமுடியாது.

## லண்டனில் "இந்திய விரோதிகள்"

மிஸ்டர் சர்ச்சிலின் நெருங்கிய நண்பர் சர்வால்டர் மாங்டனும், நிஜாம் பணத்தை தண்ணீர் போல் செலவிடும் லண்டனிலுள்ள ஹைதராபாத்தின் ஏஜெண்ட் ஜெனரல் நவாப் மாயிஸ் நவாஸ் ஜங்கும் பல ரகசிய சூழ்ச்சிகள் புரிந்து காமன்ஸ் சபையில் ஹைதராபாத் பிரச்னையைப் பற்றி விவாதிக்கச் செய்யும் அளவுக்கு வெற்றி பெற்றுவிட்டபடியால் இந்திய டொமினியனுக்கு எதிராக லண்டனில் உருவாயுள்ள சதிபற்றி சில தகவல்கள் அளிப்பது மிகையாகாது.

இந்திய இடைக்கால சர்க்கார் நிறுவப்பட்டவுடனேயே சதி ஆரம்பமாகிவிட்டது. பிரிட்டிஷார் வெளியேறு முன்னரே 1947 ஏப்ரலில் அவசர அவசரமாக லண்டனில் நிஜாமின் ஏஜெண்டு ஜெனரல் ஒருவர் நியமிக்கப்பட்டார். டார்செஸ்டர் ஹோட்டலில் அவரது காரியாலயம் அமைக்கப்பட்டது. ஹைதராபாத்தின் வர்த்தகம் வியாபாரத்தைப் பெருக்குவதே புதிய ஆபீசின் நோக்கமென வெளிப்படையாகக் கூறப்பட்டது. உண்மையில், அரசியல் சதி நடவடிக்கைகளில் அவர் முழு நேரத்தையும் செலவிட்டார். முதலில் கோவா துறைமுகத்தை நிஜாம் வாங்க சம்பாஷணைகள் துவக்கப்பட்டன. பின்னர் யுத்த விமானங்கள், ஒலிபரப்பும் கருவிகள் தளவாடம் ஆகியவை வாங்குவதிலும் தீவிர பிரசாரத்தில் நவாஸ்ஜங் ஈடுபட்டார்.

1947 மே மாதம் போக்கு போர்த்துகீஸிய சர்க்கார் பிரதிநிதிகளை நிஜாமின் ஏஜெண்ட் ஜெனரல் சந்தித்து பிரிட்டிஷாரைப் போல அவர்களும் இந்தியாவிலுள்ள காலனிகளை விட்டு வெளியேறுவதானுல் அவற்றை நிஜாம் விலைக்கு வாங்கத் தயார் என அறிவித்தார்.

கோவா துறைமுகத்தை விலைபேச அவர்கள் மறுக்கவே, நிஜாமுடன் வேறுவிதமான ஒப்பந்தமாவது அவசியமென்றும் இல்லாவிடில் தனித்திருக்க நேரிடுமென்றும், சீக்கிரம் நாட்டிலிருந்து வெளியேற்றப்படக் கூடுமென்றும் ஏஜெண்ட் ஜெனரல் கூறினர்.

'சர்' பட்டம் பெற்ற ஒரு பிரிட்டிஷ்காரர் இரு தரப்பினருக்கு மிடையே மத்தியஸ்தம் செய்வித்ததற்காக 10 ஆயிரம் பவுன்கள் பெற்றாராம்! கோவாவிலிருந்து ஹைதராபாத்திற்கு சாக்குகள் தடையின்றி செல்ல இந்தியாவுடன் நிஜாம் ஏற்பாடு செய்து கொள்ளவேண்டுமென இறுதியாக போர்த்துகீஸிய பிரதிநிதிகள் நிபந்தனை விதித்தனர். துறைமுக அபிவிருத்தி வேலைகளைச் செய்யும் கம்பெனிக்குச் சலுகை அளிப்பதாயும் உறுதி கூறினர்.

ஹைதராபாத் சமஸ்தானத்திற்கு எப்படியேனும் ஒரு விமானப் படையை சிருஷ்டிக்கும் கைங்கர்யத்தில் அடுத்தபடியாக ஏஜெண்ட் ஜெனரல் முனைந்தார். இதற்காக ஒரு மாஜி பிரிட்டிஷ் உயர்தர விமான அதிகாரியை அணுகினர். ஆனுல் பிரிட்டிஷ் சர்க்காரிடமிருந்து அவர் அனுமதி பெறமுடியவில்லை. ஆனுலும் ஒரு ஐரோப்பிய விமான கம்பெனியின் டைரக்டர் நிஜாமின் விமானப்படை ஆலோசகராக நியமிக்கப்பட்டு விமானங்கள் வாங்க அவர் வசம் 20 ஆயிரம் பவுன் கொடுக்கப்பட்டது.

1947 அக்டோபரிலேயே 52 ரேடியோ ஒலிபரப்பிகளை வாங்கியனுப்புமாறு ஏஜெண்ட் ஜெனரலுக்கு உத்தரவு பறந்தது. இவற்றில் 32 இங்கிலாந்திலிருந்து ரகசியமாக ஹைதராபாத்துக்கு விமான மார்க்கமாகக் கடத்தப்பட்டன.

பிரசார விஷயங்களிலும் விசேஷ கவனம் செலுத்தப்பட்டது. நடப்பு நீடிப்பு ஒப்பந்த பேச்சுவார்த்தைகள் நடக்கையில் அவர் நிஜாமுக்கு அனுப்பிய தந்தி யொன்றில், தற்போதைய சம்பாஷணை முறிந்தவுடன் நிஜாமின் அபிப்பிராயங்களை லண்டனிலுள்ள பிரிட்டிஷ், அமெரிக்க, ஐரோப்பிய இதர அயல்நாட்டு பத்திரிகா நிருபர்களுக்கு விளக்கிக் கூற தீவிர பிரசாரம் அவசியம் என்றும் இதற்காக சென்ற 3 வாரங்களில் பல நிருபர்களுடனும் பத்திரிகைகளுடனும் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டதாகவும் இவற்றிற்கான செலவு ஜாபிதா இத்துடன் அனுப்பியிருப்பதாகவும் கூறியுள்ளார்.

முதலாவதாக ஹைதராபாத்தில் வாசம் செய்த வக்கீல் ஒருவர் "ஹைதராபாத்தும், இந்தியப் பிரிவினையும்" என்று ஒரு பிரசுரத்தைத் தயாரித்தார். இதன் பிரதிகள் லண்டனிலுள்ள நிஜாம் அனுதாபி நிருபர்களுக்கும் இதர ஆதரவாளர்களுக்கும் அனுப்பப்பட்டன. நிருபர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் ஏராள விருந்துகள் அளிக்கப்பட்டன. அவ்வமயம் நிஜாமின் அபிப்பிராயம் விரிவாக எடுத்துரைக்கப்பட்டது. செல்வாக்கு மிகுந்த ஒரு பிரிட்டிஷ் ஆசிரியருக்கு 450 பவுன் "உபகார" சம்பளமாகவும், செய்தி ஏஜென்ஸி அதிகாரிக்கு பெருந்தொகையும் வழங்கப்பட்டன. பிரசாரத்திற் கென்று ஒதுக்கப்பட்ட 5 ஆயிரம் பவுனில் இவைடந்தேறின.

இர்வின்டக்ளஸ் என்னும் ஆஸ்திரேலிய பத்திரிகா நிருபர் ஒருவரை அறிமுகப்படுத்தி ஏஜெண்டு ஜெனரல் ஹைதராபாத் பிரதமருக்கு எழுதிய கடிதம் இவர்கள் எல்லையற்ற பிரசாரத்திற்கு ஒரு அறிகுறியாகும். மிஸ்டர் டக்ளஸின் கட்டுரைகள் ஆஸ்திரேலியாவில் மட்டுமன்றி ராய்டர் வழியாகவும் அமெரிக்கா உள்பட உலகெங்கும் பிரசுரிக்கப்படுமாம். அமெரிக்காவும் ஆஸ்திரேலியாவும் இந்திய விவகாரங்களில் சிரத்தை காட்டுவது யாவரும் அறிந்ததே.

'ஹிந்துஸ்தான் டைம்ஸ்'

### லண்டனில் இந்திய தாவரநூல் நிபுணர்

இந்திய தாவரநூல் நிபுணரான டாக்டர் இ. கெ. ஜானகி அம்மாள் தான், வார்ரே மாகாணத்தில் இரு ஆண்டுகள் நடத்திய ஆராய்ச்சிகளின் பலன்களை மாதிரிகள் மூலமும் படங்கள் மூலமும் பொது மக்களுக்கு விவரிப்பதற்காக சமீபத்தில் நடைபெறவிருக்கும் செல்ஸா 'மலர் கண்காட்சி'க்கு விஜயம் செய்துள்ளார். யுத்தகாலத்தின்போதுதான் இவ்வம்மையார் சென்னையிலிருந்து பிரிட்டன் வந்தார். தற்போது இவர் மணிலாக் கொட்டைகளின் எண்ணெய் சத்தை இருமடங்கு அதிகரிப்பதற்கான ஆராய்ச்சிகளில் ஈடுபட்டிருக்கிருர்.

### லண்டனில் இந்திய ஓவியங்கள்

இவ்வருடம் லெய்செஸ்டரில் நடைபெறவிருக்கும் 'புகழ்பெற்ற ஓவியக்காரர்கள்' என்ற கலைக்கண்காட்சியில் மேரி கிருஷ்ணு என்ற பிரபல இந்திய சித்திர நிபுணரின் படங்களும் இடம்பெறப் போகின்றன. மேரி கிருஷ்ணு தீட்டியுள்ள அநேக சித்திரங்கள் கடந்த ஆண்டு நடைபெற்ற இதே கண்காட்சியில் பல பிரபல ஓவிய நிபுணர்களாலும் பெரிதும் புகழப்பட்டன.

### கவிமணியின் படத்தைத் திறந்து வைக்க

கவர்னர் ஜெனரல் ராஜாஜி திருவிதாங்கூர் விஜயம் செய்யும்போது கவிமணி தேசிக விநாயகம்பிள்ளையின் படத்தைத் திறக்கும்படி திருவிதாங்கூர் தமிழ்நாடு காங்கிரஸ் அழைத்திருப்பதோடு தி. த. நா. காங்கிரஸ் மெம்பர்கள் சமர்ப்பிக்கும் விஞ்ஞாபனத்தை ஏற்றுக்கொள்ளும்படியும் கேட்டிருக்கிறது.

### ஜார்ஜ் பேர்னுட்ஷா

பிரபல நாடகாசிரியர் ஜார்ஜ் பேர்னுட்ஷாவுக்கு இப்பொழுது வயது 92 ஆகிறது. லாகோஸ் பத்திரிகை ஒன்றில் ('தி வெஸ்ட் ஆப்பிரிகன் பைலட்') பேர்னுட்ஷா இறந்துபோனதாக ஓர் செய்தி வெளியிடப்பட்டிருந்தது. இதை அறிந்ததும் அப்பத்திரிகையின் ஆசிரியருக்கு பேர்னுட்ஷா பின்வருமாறு ஓர் தந்தியை அடித்தார்:-'தாங்கள் வெளியிட்டுள்ள குறிப்பு, காலத்திற்கு முன்பு பிரசுரமாகி யிருக்கிறது. நான் இப்பொழுது பாதிதான் செத்திருக்கிறேன். தயவு செய்து அக்குறிப்பை மறுத்து திருத்திவிடவும்'.

### திரு. விநோபா பாவே பிரசாரம்

வகுப்பு வாதத்தை வெட்டிப் புதைப்பதற்காக நாடு முழுவதும் சுற்றுப் பிரயாணம் செய்ய ஆச்சார்யா விநோபா பாவே திட்டம் போட்டு வருவதாகத் தெரிகிறது.

பாகிஸ்தான் அதிகாரிகள் அனுமதித்தால் பாகிஸ்தான் பிரதேசங்களுக்கும் அவர் போகலாம்.

### தேவகோட்டையில் தீ விபத்து

தேவகோட்டை மகமதியர் பட்டணம் தெற்குத்தெருவில், ஜூலை 20-உ சுமார் 10 மணிக்கு ஒரு கூரை வீட்டில் சமையல் செய்துகொண்டிருக்கும்பொழுது அகாரணமாக நெருப்புப் பிடித்து பக்கத்திலுள்ள பல கூரைக் கட்டிடங்களும், ஒன்றிரண்டு ஓட்டு வீடுகளும் எரிந்துவிட்டன. சேதம் சுமார் ரூ. 500 இருக்கலாமென்று தெரிகிறது. இரண்டு ஆடுகள் நெருப்பில்வெந்துவிட்டன. நெருப்பை அணைப்பதில் நகரசபையாரும் பொது மக்களும் ஒத்துழைத்தனர்.

## நல்குரவும் நகைச்சுவையும்

(சேது. வீரப்பன், புதுவயல்)

புலவன் பாணன்—தொல்லிசை படைத்த நல்லிசைப்புலவன்- அறிவு நிறை தன்மையன்- செறிவுறு செஞ்சினன்-பொற்புறுபான்மையன், ஆம். பாட்டிற்கென்றே பிறந்த பாணன் பலனிற்பற்றின்றிப் பணி புரிந்தான். பண்பான நம் பண்டை நாட்டிற்கு மண்மாண் புனைபாவை போன்றன்றி, நுண்மாண் நுழைபுலம் தாவல்ல கல்விச் செல்வம் செறிந்திருந்த செம்மல்தான் அவன். ஆயினும் பூரியார் கண் பொதிந்துள்ள பொருட் செல்வம் நிறைந்தில்லையே! என் செய்வான்?

பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்பது பொய்யாமொழியாதலின் பொருள் வேண்டிப் புறப்பட்டான் புரவலரை நோக்கி. வரிசிலை ஏந்திய வடிவுகொண்ட காமனைப் போல கழலடி சிவப்ப நடந்தனன். கண்ணினன் புரவலர் ஒருவரை. பல்லெலாம் தெரியக் காட்டித் துணைக்காம் விரித்து நீட்டித் தாங்குனரின்றித் தளர்கின்ற தன் நிலையைத் தெற்றெனத் தெரிவித்தான். அழல் வெஞ்சிலை வேடன் அம்புருவ ஆற்ருது உழலும் களிமயில் போல் உழலும் தன் நிலையை உணர்த்தினன்.

புலவனின் நிலைகண்ட புரவலர், இரப்போர்க்கு ஈதலும் அதனல் இசைபட வாழ்தலுமே ஊதியமாகக் கொண்ட தன் உன்னத நோக்கால் யானை ஒன்றினைப் பரிசிலாக அளித்தார். மாரிநாட் குயில் போல மனம் புழுங்கி இருந்த புலவன், வான்துளி விழக்கண்ட வானம்பாடி போல் மனம் மகிழ்வெய்தினன். பரிசில் பெற்ற பாணன், 'போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து' என்னும் திண்ணிய எண்ணத்துடன் வீடு நோக்கி விரைந்து சென்றான்.

விரைந்து வந்த பாணனை விழிகளால் நோக்கிய பாணி (பாணனின் மனைவி) பரிவுடன் எதிர் கொண்டழைத்தாள். கிடைத்தது யாதெனக் கேட்டாள்.

வினவிற்கு விடையளிக்க விழைந்த பாணன், தான் யானை ஒன்று பெற்ற செய்தியினை உரைக்காது மறைமொழிகளில் அதனை அறிவிக்கத் துவங்கினன். ஆதலின் வேறு ஒன்றும் விடையளிக்காது 'வம்பது ஆம் களபம்' என்று மட்டும் மறுமொழி கூறினன். அதனைக் கேட்ட பாணி 'சந்தனம்' எனக் கருதி 'பூசும்' எனப் புகன்றாள். பிறகு பாணன் 'மாதங்கம்' என உரைத்தான். 'மாதங்கம்' என்றவுடன் மட்டற்ற மகிழ்வெய்திய மங்கை 'வகையுற வாழலாம்' என எண்ணி எக்களிப்பு எய்தினள். தான் கொண்டுவந்திருப்பது 'யானை' என்பதனை இன்னும் உரைக்காத பாணன் அவன் மனைவியை நோக்கி 'பம்பு சீர் வேழம்' எனப் பகன்றான். ஆனல் பாணியோ 'கரும்பு' எனக் கருதித் தெவிட்டும் வரை 'தின்னும்' எனக் கூறினள். பின்னும் 'பகடு' எனப் பகன்றான் பாணன். 'எருது' என எண்ணிய எள்ளளில் மகளாகிய பாணி 'பழனத்தை உழும்' என உரைத்தாள். அதுகேட்ட பாணன் 'கம்ப(ம்)மா' எனக் கூறினன். உடனே நல்லகளி களறலாம் எனக் கருதிய காரிகை 'நற்களியாம்' என நவின்றாள். இறுதியாக 'கைம்மா' என இடித்துரைத்தான் பாணன். கலக்கமுறும் எண்ணங்கள் கரிந்து போகக் கள்தீர மதுவருந்திக் களித்திருக்கலாம் எனக் கருதிய காரிகை 'கைம்மா' என்றவுடன் கலங்கினள். ஏன்? 'கைம்மா' ஒரு கையை உடைய விலங்கு. எது? 'யானைதான் அது.

நல்குரவிலும் நகைச்சுவையின் நயத்தை நயமுறப் பயன்படுத்திய தன் நாயகனின் நல்லறிவை நங்கை உச்சிமேல் வைத்து மெச்சிப் புகழ்ந்து போற்றினள்.

## வாழ்கின்ற வையம்

"பேரிசி"

வானத்துக் கருமுகிலே உன்னை மக்கள்
வாழ்த்தும்சொல் பற்பலவும் கேட்டேன்! ஆனல்
கானத்து மாமயிலுன் கருமை கண்டு
கவினுகத் தோகைவிரித் தாடும் போதே
ஏனத்து வாழ்குயிலுன் குமுறல் கேட்கும்!
எங்கேசென் ருெளிப்பதென எண்ணும்! அந்தோ;
வானத்து வாழ் முகிலே நீயும் சில்லோர்
வாய்கூறும் சுடுசொல்லுக் காளே அன்ருே!

வீயாது மக்களினம் வாழ வென்று
விழிப்பான வழியொன்று வகுப்பான் தன்னை!
ஆயாத பலகருத்தை ஆய்ந்து சொல்லும்
அறிஞனை! இவ் வையத்தின் களஞ்சியத்தை!
ஓயாத அலைமோதும் உலகத்தின்முன்
ஓங்குபுகழ் பெறுவானோர் ஒப்பில்லானை!
வாயார வாழ்த்தும்சொல் கேட்கும் போதே
வசைச் சொல்லும் விழும்ஈது வழக்கம் அன்ருே!

கோவிலுக்கு முன்னுளில் மக்கள் தந்த
குவியலெனும் பல்வேலி நிலத்தின் மூலம்
ஆவியுடன் வாழ்வயிரும் ஐயனுக்கே
அவியலிட்டு வாழ்ந்திருந்த மக்கள்! இன்றத்,
தீவினையின் தீச்செயலை நீக்கக் கேட்டுத்
திகைக்கின்ருர்! உழைக்கின்ற உழவர் மக்கள்
காவியத்தை ஆக்கிமகிழ் கவிஞன் போலக்
களிக்கின்ருர்! ஈதுலகத் தியற்கை யன்ருே!

நல்லபெருந் தலைவர்களை ஈன்ற நாடு!
நற்கருத்துப் பற்பலவும் பெற்ற நாடு!
வல்ல பல பேறறிஞர் வாழும் நாடு!
வாய்மைக்கோ என்றுமழி வில்லா நாடு!
நல்ல இந்த நாட்டினிலே தான்வாழ்கின்ருர்!
நச்சரவை ஒத்தவர்கள் நன்றில் மாக்கள்!
சொல்லுமிந்த மாக்களுயர் மக்களானல்?
சொர்க்கம் நாம் வாழ்கின்ற வையம் அன்ருே!



## நோட்டீஸ்

தேவகோட்டை

டி. மு. கோர்ட்டு

1948 ஆு S. C. No. 52

ராம. பள. ராம. பள. குப. குப்பாஞ் செட்டியார் } வாதி

M. நாகலிங்கம் பிள்ளை—பிரதிவாதி

வாதிக்குப் பிரதிவாதி 3—8—45உ யில் எழுதிக் கொடுத்திருக்கும் புரோநோட்டுப்படிக்குள்ள அசல் வட்டி ரூ 72—4—0 க்கு ஷை நிரில் வியாஜ்ஜியம் செய்து 16–8–48உ வாய்தா. ஆக்ஷேபனை யிருந்தால் ஷை தேதி கோர்ட்டு முன் ஆஜராகி தெரிவித்துக் கொள்ளத் தவறினல் ஒருகலை பக்ஷமாக தீர்மானிக்கப்படும்'

R. கிருஷ்ணசாமி ஐயங்கார்
வாதி வக்கீல்

தேவகோட்டை
3—8—48.

## நோட்டீஸ்

தேவகோட்டை

டி. மு. கோர்ட்டு

1948 ஆு O. S. No. 97.

வீ. வீரப்புடையார்— வாதி

கும்மங்குடி, திருவிடையார் சேர்வை மகன், ராமசாமி சேர்வை } 2-ம் பிரதிவாதிக்கு

ஷையாருக்கும் இதரர்களுக்கும்

லேட் திருவிடையார் சேர்வை 29-10-1925-ந் தேதியில் வாதியின், தகப்பனுருக்கு ரூ. 280—0—0-க்கு எழுதிக் கொடுத்திருக்கும் நடுகடன் பத்திரத்துக்கு வரவு வந்தது போக பாக்கிக்கு, ரூ. 66—11—4-யும் செலவு பின்வட்டி சகிதம் வரப்பற்ற, வாதி உங்கள் வகையரு பேரில் பிருது செய்து 11—8—48-ந்தேதி வாய்தா ஏற்பட்டிருக்கிறது. அதில் உமக்குள்ள ஆக்ஷேபணையை ஷை தேதி காலை 11 மணிக்கு இந்தக் கோர்ட்டில் ஆஜராகி அறிவித்துக்கொள்ளவும். தவறினல், பிருதுப்படி நடு சொத்துக்களை ஜப்தி அன்னியில் ஏலம் போட பிரிலிமினரி டிக்கிரி பாஸ் செய்யப்படுமென்று அறியவேண்டியது.

M. R. சிவராமகிருஷ்ண ஐயர்,
வாதி வக்கீல்.

தேவகோட்டை
2—8—48 }





## 144 அனுமதிக்க முடியாது

திருப்பத்தூர் தாலுக்கா காங்கிரஸ் நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர் திரு நா. அருணசலன், மகிபாலன்பட்டி காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு அழகப்ப செட்டியார், காரியதரிசி திரு. செல்லய்யா சேர்வை மற்றும் பலரைச் சேர்த்து 25 நபர் மீது திருப்பத்தூர் மாஜிஸ்ட்ரேட் கோர்ட் M.C. நிர் 23/48 மூலம் கோறிய தடையுத்தரவு மனுவைப் பரிசீலனை செய்து 28-6-48 அன்று மாஜிஸ்ட்ரேட் திரு ராமசுந்தரம் அவர்கள் 144 அனுமதிக்க முடியாதென தீர்மானித்து மனுதார் மனுவைத் தள்ளி விட்டதாக ஒரு அன்பர் அறிவிக்கிருர்.

## நோட்டீஸ்

தேவகோட்டை

சப்கோர்ட்டு

1948 ஆு E. P. No. 93

1945 ஆு O. S. No. 102

K. A. PL. நாகம்மை ஆச்சி (1)
மைனர் லெட்சுமணன் செட்டியார்— (2)
ஷை மைனருக்கு ஸ்வீகார தாயாரும் அடுத்த ஸ்நேகிதியுமான 1-வது வாதி மூலம் } வாதிகள்

வெ. சு. ராம. ராமனுதன் செட்டியார்— } பிரதிவாதி

வாதிகளுக்குப் பிரதிவாதி கொடுக்க வேண்டிய தொகைக்காக இதனடியில் கண்ட சொத்து வாதிகளால் ஏலத்துக்குக் கொண்டு வரப்பட்டு 20—9—1948-உ கோர்ட்டில் ஏலம் போடும்படி உத்திரவு செய்யப்பட்டிருக்கிறது.

### சொத்து விபரம்

இராமனதபுரம் டிஸ்ட்டிரிக்கிட்டு காரைக்குடி சப்டிஸ்ட்டிரிக்கிட்டு உய்யக்குண்டான் கிராமத்தில் தென்வடலோடிய வீதிக்குக் கிழக்கு. லெ. ராம. மு. வெங்கிடாசலம் செட்டியார் வீட்டுக்கும், பிரதிவாதி சந்து இடத்துக்கும் தெற்கு. லெ. பி. கு. ராமன் செட்டியார் வீட்டுக்கும், சித. மெ. மெய்யப்ப செட்டியார் வீட்டுக்கும் மேற்கு. ப. செ. அண்ணுமலை செட்டியார் இடத்துக்கும் கிழமேலோடிய வீதிக்கும் வடக்கு. இதற்குள்ளான மேற்குப் பார்த்த முகப்புள்ள ஓட்டடுக்குக் கெட்டிக் கட்டிடம், முதல் கட்டுப் பட்டகசாலை, இரண்டாங் கட்டு மனையிடம், அதைச் சேர்ந்த காலியிடம், கிணர், விருக்ஷ ஜாதிகளும், ஷை எல்லைக்குள் தென்புறமுள்ள காலியிடம், அதிலுள்ள ஓட்டுக் கொட்டகை, கிணர், விருக்ஷ ஜாதிகள் உள்பட கிழமேல் உத்தேசம் ஜாதியடி 110; தென்வடல் உத்தேசம் ஜாதியடி 160. இதில் லெ. அ. சித. அண்ணுமலை செட்டியார் பாகம் பாதி நீக்கி, பிரிவினையில்லாத பிரதிவாதியின் பாகம் மட்டிலும் பிரதிவாதிக்குப் பூர்வீக பாத்தியம். கோர்ட்டார் மதிப்பு. ரூ. 12000-0-0.

T. பார்த்தஸாரதி,
வாதிகளின் வக்கீல்.

தேவகோட்டை
29—7—48 }

## விஞ்ஞான வளர்ச்சி பற்றி நிதி மந்திரி பேச்சு

ஜூலை 27-ம் தேதியன்று பீளமேட்டில் பி. எஸ். ஜி. காலேஜில் விஞ்ஞான வகுப்பைத் திறந்து வைக்கையில் இந்திய சர்க்கார் நிதிமந்திரி திரு ஆர்: கே. ஷண்முகம் செட்டியார் பேசியதாவது:-

கல்லூரிகளில் விஞ்ஞானம் சொல்லிக் கொடுப்பது அவசியம். ஒரு தேச முன்னேற்றத்திற்கு விஞ்ஞான ஞானம் அவசியம். முக்கியமாக புதிதாக சுதந்திரம் பெற்ற நம்முடைய தேசத்திற்கு அதிக அவசியம். விஞ்ஞானக் கல்வி உலக முழுவதும் முன்னேறிக்கொண்டு போகிறது. சென்ற 50 வருஷங்களில் விஞ்ஞானத்தின் முன்னேற்றம் ஓர் அதிசயமென்றே சொல்லலாம். விஞ்ஞானத்தின் அர்த்தம் இயற்கையை மனிதன் தனது நன்மைக்கு பயன்படுத்திக்கொள்வது என்பதுதான். முதன்முதலாக மனிதன் விஞ்ஞானத்தின் மூலம் தங்கத்தை கண்டுபிடித்து அதைக் கொண்டு செல்வந்தனுக ஆகலாமென்ற நோக்கத்துடன் அதைப் பயின்ருன். ஆனல் மனிதனின் அறிவு வளர வளர தங்கத்தினலேயே எல்லா செல்வமுமில்லை யென்று கண்டு கொண்டான். புராணத்தில் ஒரு கதை உண்டு. ஒரு பக்தன் தபஸ் இருந்து கடவுளை தரிசித்து தான் தொட்டதெல்லாம் தங்கமாக வேண்டுமென்று வரம் கேட்டான். கேட்ட வரம் கிட்டியது. ஆனல் அவன் தொட்டதெல்லாம் தங்கமாகவே தான் உண்ணவேண்டிய உணவும் தங்கமாயிற்று. தங்கத்தை சாப்பிட முடியாமல் பட்டினி கிடக்கவேண்டியாயிற்று! சமீபத்தில் ஒரு நூறு வருஷ காலத்தில் தான் உண்மைச் செல்வம் உலோகங்களில் மட்டுமில்லை. ஆனல் இயற்கையில் அகப்படும் சகல பொருள்களிலும் இருக்கிறது. அவைகளையெல்லாம் சரியானபடி உபயோகித்தால் தான் முன்னேற முடியுமென்று மனிதன் தெரிந்துகொண்டான். இப்படி தெரிந்துகொண்டும் சென்ற 50 வருஷ காலமாக மனிதன் விஞ்ஞானத்தை துர் உபயோகப் படுத்தி உலகத்திற்கு பலவித கஷ்டங்களை உண்டாக்கினன். வெடி மருந்தை எடுத்துக்கொள்வோம். அதை சீனர்கள் கண்டுபிடித்தார்கள். அதைக் கொண்டு குழந்தைகளுக்கு பட்டாசு செய்துகொடுத்தார்கள். இந்த விளையாட்டுக்காக கண்டுபிடிக்கப்பட்ட பொருளை மனிதன் ஓர் பெரிய நாசகாரி கருவியாக மாற்றிவிட்டான். அத்தமாதிரி பூமி, சமுத்திரம், ஆகாயம் இந்த மூன்றிலும் இருக்கும் சக்தியை மனிதன் வசப்படுத்திக்கொண்டு பெரிய நஷ்டத்தையும், நாசத்தையும் விளைவிக்கும் முறையில் உபயோகித்து வருகிருன். இது ஒரு வருத்தத்தை தரக்கூடிய விஷயம். ஆனல் இதில் ஆச்சர்யம் ஒன்றுமில்லை. ஏனென்ருல் மனிதனுக்கு 1000 வருஷத்திய நாகரீகம் இருந்தபொழுதிலும் அவனுடைய சுபாவம் மாறவில்லை. மனிதனின் மனதை ஓர் குழந்தையின் மனதிற்கு ஒப்பிடலாம். ஓர் அழகான வஸ்துவை ஓர் குழந்தையிடம் கொடுங்கள். உடனே அந்தக் குழந்தை அந்த வஸ்துவை பிரட்டி பிரட்டி உடனே முறித்து விடுகிறது. விஞ்ஞானத்தில் மனிதனின் மனப்பான்மை குழந்தையின் மனப்பான்மையை ஒட்டியிருக்கிறது. ஆகையால் மனிதன் தனது மனப்பான்மையை மாற்றிக்கொள்ளாதவரை அவனுடைய சுபாவம் மாருது. மனித வர்க்கம் முன்னேற வேண்டுமானல் மனிதர்கள் உண்மையான சந்தோஷம் நாசகாரி கருவியில் உற்பத்தி செய்வதில் இல்லை. ஆனல் விஞ்ஞானத்தை உலக சந்தோஷத்திற்கும் க்ஷேமத்திற்கும் இணைக்கவேண்டுமென்றும் தெரிந்துகொள்ள வேண்டும். ஓர் பெரிய யுத்தம் முடிந்தும் இன்னும் ஓர் அபாயகரமான அமைதியில் இருக்கிறோம். இதிலிருந்து தேசங்கள் தங்கள் மனப்பான்மையை மாற்றிக் கொள்ளவில்லை யென்று தெரிகிறது.

### தென்னிந்தியாவில் நெசவு ஆராய்ச்சி சாலை

ஓர் தேசத்தின் கைத்தொழில் முன்னேற்றம் அதனுடைய விஞ்ஞான அபிவிர்த்தியை ஒட்டி இருக்கிறது. மற்ற தேசங்களுக்குச் சமமாக நமது தேசமும் ஆகவேண்டுமானல் நாம் நமது கைத்தொழில்களை அபிவிர்த்தி செய்யவேண்டும். அதற்கு விஞ்ஞான வளர்ச்சி வேண்டும். நமது தேசத்தில் பல இடங்களில் விஞ்ஞான ஆராய்ச்சி சாலைகள் ஸ்தாபிக்கப்படுவதை நீங்கள் பார்த்து வருகிறீர்கள். தென்னிந்தியாவிலும் கூடிய சீக்கிரத்தில் ஓர் நெசவு ஆராய்ச்சிசாலை ஸ்தாபிக்கப்படும். கோயமுத்தூர் கைத்தொழில் அதிக முன்னேற்றமடைந்திருக்கிறது. அந்த முன்னேற்றத்தை இலை சிறந்த வேண்டுமானல் பல விஞ்ஞான ஸ்தாபனங்கள் இப்படி ஏற்படுத்தப்பட வேண்டும். இந்த நெசவு ஆராய்ச்சி சாலைக்கு மில் சொந்தக்காரர் பண உதவி அளிக்க முன் வந்திருக்கிருர்கள். இந்த ஆராய்ச்சிசாலை கோயமுத்தூருக்கு மட்டுமல்லாமல் சுற்றியுள்ள பிரதேசங்களுக்கும் பயன்படுமென்று நம்புகிறேன்."



## நோட்டீஸ்

தேவகோட்டை

சப் கோர்ட்டு

1945 ஆு O. S. No. 107

1948 ஆு E. P. No. 48

கண்டனூர் வயி. ராம. அரு. ராமனுதஞ் செட்டியார் } வாதி

காரைக்குடி மு. கா. மு. பெரியணன் செட்டியார். } பிரதிவாதி

வாதி, பிரதிவாதி பேரில் பெற்றிருக்கும் நட்டு டிக்கிரியை ஷை நிம்பரில் நிறைவேற்றி, பிரதிவாதிக்குப் பூர்வீக பாத்தியமாயுள்ள இதனடியில் கண்ட சொத்துக்கள் ஏலத்திற்கு 13—9—1948உ வாய்தா ஏற்பட்டிருக்கிறது. ஷை சொத்துக்களை ஏலம் கேட்க விரும்புகிறவர்கள் வாதியின் வக்கீலவர்கள் ஆபீஸில் விவரங்களைத் தெரிந்து கொள்ளலாம்.

### சொத்துக்களின் விபரம்

இராமநாதபுரம் டிஸ்டிரிக்ட்டு காரைக்குடி சப்டிஸ்டிரிக்ட்டுகம்பா காரைக்குடி டவுனில் 11 வது வார்டில் மு. ராம. வீதியில்,

(1) கிழமேலோடிய மு. ராம. சந்து வீதிக்கும் வடக்கு. இதன் 2 வது லெக்க சொத்துக்கும் கிழக்கு. மரு. சு. சுப்பையா செட்டியார் தோட்டச் சுவற்றுக்கும், கருத்தான் செட்டியார் வீட்டுத் தோட்டச் சுவற்றுக்கும் தெற்கு. மு. ராம. பெரியணஞ் செட்டியார் வீட்டுக்கும் மேற்கு. இதற்குள்ளான உத்தேசம் குழி 2000. உள்ள காரைக்குடி டவுன் முன்ஸிபாலிடி T. S. 70&71 நிம்பராய் ஏற்பட்டிருக்கிற இடங்கள் அதிலிருக்கிற ஓட்டடுக்குக் கெட்டிக் கட்டிடங்கள் வகையரா காம்பவுண்டுள்பட சகலத்திலும் மு. கா. வீர: வீரப்ப செட்டியார் என்ற காசி செட்டியார் மகன் பெரியணன் செட்டியார் பாகம் பாதி நீக்கிப் பிரதிவாதிக்குப் பாத்யமான பாகம்பாதிக்குச் சேர்ந்த பிரிவினையில்லாத சகல பாத்யமும்.

ஷை சொத்து பாதிக்கு முன்சிபல் வரி 6 மீ திற்கு ரூ 14—14—0
கோர்ட்டார் மதிப்புரூ 11000-0-0

(2) ஷை 1 வது லெக்க சொத்துக்கும் மேற்கு. கிழமேலோடிய மு. ராம. வீதிக்கும் வடக்கு. தென் வடலோடிய சித கா. சந்து வீதிக்கும் கிழக்கு. ப. ராம. பழனியப்ப செட்டியார் வகையரா ஸ்வாமி வீட்டுக்கும் தெற்கு. இதற்குள்ளான உத்தேசம் குழி 200 உள்ள காரைக்குடி டவுன் முனிசிபாலிடி 5 வது வார்டு T. S. 74 நிம்பர் ஏற்பட்டிருக்கிற பங்களா கட்டிடம் வகையரா காம்பவுண்டுள்பட சகலவித பூரா பாத்யமும்.

ஷை சொத்து பூராவுக்கு 6 மீத்திற்கு முன்சிபல் வரி ரூ29—3—0

கோர்ட்டார் மதிப்பு ரூ 14000-0-0

பிரதிவாதிக்குப் பூர்வீக சொத்து பாத்யம் அவர் அனுபவம்.

M. G. முருகதாஸன்
வாதியின் வக்கீல்

தேவகோட்டை
29—7—1948

## நேருஜியின் பொன்னுரைகள்

(முதல் பக்கத் தொடர்ச்சி)

மதிப்பை நீங்கள் நிலை நிறுத்தவேண்டும். இந்தியாவிலும், மற்ற இடங்களிலும் ஏற்படும் அரசியல் மாறுதல்களைக் கவனிக்கும்போது, நான் மதிப்புக் குறைவைக் கண்டு அஞ்சுகிறேன். யுத்தம் மக்கள் நடத்தையைப் பாழாக்கியது. அதே நிலைமை தான் இன்றுமிருக்கிறது. அதை நாம் ஒழிக்கவேண்டும். அதைவிட ஆபத்தானது குறுகிய மனப்பான்மை. அது தான் அண்ணலைக் கொன்றது. இக்குறுகிய எண்ணமே கடந்த காலத்தில் இந்தியாவின் வீழ்ச்சிக்குக் காரணமாயிருந்தது. அந்த எண்ணம் இன்னும் இருக்கிறது. அதனால் கடந்த, நிகழ், எதிர்காலங்களை நினைக்க முடிவதில்லை. பாகிஸ்தான் உற்பத்திக்கும் இதுவே காரணம். நீங்கள் காந்திஜியைப்பற்றிப் பேசும்போது அவரது நோக்கங்களின் அடிப்படையை நினைத்து அவர் நம் நாட்டுக்கு என்ன செய்தாரென்பதை உணருங்கள். இளைஞர்களாகிய உங்களுக்கு அவரது பிற்கால வாழ்வுதான் தெரியும். அவருடன்கூட உழைத்த எங்களுக்கு இந்த 30 வருஷ காலத்தில் இந்தியாவின் எதிர்காலத்தை அவர் வடித்ததெல்லாம் தெரியும். அவர் நாட்டிற்குச் செய்த தொண்டு ஆச்சரியமானது. அவரைப்பற்றி நீங்கள் என்னதான் கேள்விப்பட்டாலும் படித்தாலும் உங்களால் அவரைப்பற்றி அதிகம் தெரிந்துகொள்ள முடியாது. அவருடன் அந்தரங்கமாக பழகிய நாங்கள் அவரை ஒருநாளும் மறக்க முடியாது. காந்திஜியின் படத்தைப் பார்க்கும்போது அவர் எதற்காக வாழ்ந்தாரென்பதை எண்ணிப்பார்க்க வேண்டும். பெரிய நாடுகள் சிறிய செய்கைகளால் சிருஷ்டிக்கப்படுவதில்லை. இந்தியா பெரும் தேசமாக விளங்கவேண்டுமானால் நீங்கள் உன்னத நோக்குடன் உங்கள் மதிப்பைக் காப்பாற்றிக்கொள்வது அவசியமாகும்.

### அகில தமிழ்நாடு சித்த வைத்திய 3 வது மகாநாடு

அகில தமிழ்நாடு சித்த வைத்திய 3 வது மகாநாடு சமீபத்தில் மதுரை சித்த வைத்திய சங்க பொது காரியதரிசி திரு பி. மூத்துக்கருப்பபிள்ளை, உதவி காரியதரிசிகள் திருவாளர்கள் அ. ராஜகோபால் பிள்ளை, அ. ஞானசங்கரசாமி முதலியவர்களின் முயற்சியால், மதுரையில், பழனி வைத்திய ஆசிரியர் திரு ஆர். எம். கே. வேலுசாமி பிள்ளை தலைமையில் நடைபெற்றது. மகாநாட்டுத் தலைவர் மகாநாடு நடக்குமிடமாகிய அன்னக்குழி மண்டபத்திற்கு ஊர்வலமாக மேளதாள பாண்டுவாத்தியத்துடன் காரில் அழைத்துச் செல்லப்பட்டார். ஈரோடு திரு கிருஷ்ணசாமிநாயுடு மகாநாட்டை திறந்துவைத்தார்.

இந்திய மெடிகல் போர்டு மெம்பர் திருவண்ணாமலை திரு வ. சுப்பிரமணியம் தேசியக்கொடியை ஏற்றிவைத்தார். கோவை திரு என். சுப்பிரமணியம் சித்தர் கொடியை ஏற்றிவைத்தார். பிரசிடெண்ட் அவர்கள் படத்தையும் கேப்டன் திரு சீனிவாசமூர்த்தி முதலியோர்கள் படத்திறப்பு விழாவிற்குப் பின்பு பூவாளூர் திரு சோமசுந்தரம் முதலிய சித்த வைத்தியர்கள் சொற்பொழிவாற்றி பின் மகாநாட்டுத் தலைவரான திரு ஆர். எம். கே. வேலுசாமிபிள்ளை தீராத வியாதிகள் எல்லாம் நமது சித்த வைத்திய மருந்துகளால் தீருகிறது. ஆகையால் கவர்ன்மெண்டார் சித்த வைத்தியத்தை ஆதரித்து விர்த்திக்குக் கொண்டுவர வேணுமாய் கேட்டுக்கொண்டு பிரசங்கத்தை முடித்தார்.

## கதிர்காமத்தில் தொண்டர் படை செய்த சேவை

இம் மதி 7-ம் நாள் உற்சவம் ஆரம்பமாகி 22 ல் தீர்த்தவிழாவுடன் முடிவுற்றது. வதுளை சமத்துவ சங்கத்தின் ஆதரவில் வருடந்தோறும் நடைபெற்றுவரும் தொண்டர் படையில் இவ்வாண்டு 35 தொண்டர்கள் வந்து சேர்ந்து சங்கத்தின் நிபந்தனைகட்கிணங்கி அரிய தொண்டாற்றியுள்ளார்கள்.

24 போலீஸாரும் ஒரு ஸப் இன்ஸ்பெக்டரும் ஒரு இன்ஸ்பெக்டரும் கடமையாற்றினர்கள். தொண்டர்களுடன் போலீஸாரும் ஒற்றுமையாய் கண்காணித்தமையால் அனேக திருட்டுகள் தவிர்க்கப்பட்டது. அத்துடன் சில இரகசிய போலீஸாரும் கடமையாற்றியிருந்தால் பல திருட்டுகள் தவிர்க்கப்பட்டிருக்கலாம்.

தொண்டர்களின் அரிய சேவையின் பயனாக 1938-ம் ஆண்டிற்கு பின் இவ்வாண்டுவரை நரசோரம் தவிர்க்கப்பட்டது.

இவ்வாண்டு உற்சவ ஆரம்பத்தில் ஓர் விபசாரப் பெண் முருகன் தன்னில் வியாபித்து கட்டளையிட்டிருக்கிறான் என பாமர மக்களை ஏமாற்றி பொருள்பறிக்க உதவியாக இருந்த சில திருடர்களையும் அப்பெண்ணையும் தக்க தருணத்தில் கண்டித்து ஏமாற்றம் தவிர்க்கப்பட்டது.

D. E. V. பழனியப்பன் பண்டிதர் என்பவர் மகாத்மா காந்தி தன் கனவில் தோன்றி, திசமாராமையில் ஓர் மடம் கட்டும்படி கட்டளையிட்டிருக்கிறார்கள் என்று பண உதவி கோரி வெளியிட்ட நோட்டீஸ்களுடன் மேற்படியானை பிடித்து மேலும் ஏமாற்றாமல் இருக்க எச்சரிக்கை செய்யப்பட்டது.

தலவாக்கெலையைச் சேர்ந்த செந்தில்பத்தனை தோட்டம் ஆ. முத்தசாமியின் தாயார் பெரிய காமாக்ஷியும், தமக்கை சிலம்பாயி அம்மாளும் கதிர்காமம்—புத்தல்ரோட் $3\frac{1}{2}$ மைலில் அகால மரணமடைந்த துக்ககரமான தகவல் கிடைத்தவுடன் 4 தொண்டர்கள் அவ்விடம் சென்று ஒரு போலீஸ் ஜவானுடன் இரவு பகல் காவல் புரிந்து மறுநாள் கதிர்காமம் கொண்டு வந்து மரண விசாரணையின் பின்னர் நல்லடக்கம் செய்யப்பட்டது.

இரண்டு நாட்கள் அன்னஆகாரமின்றி நினைவு தடுமாறி சுமார் $1\frac{1}{2}$ மைல் தூரத்தில் காட்டிற்குள் உதவியின்றிக் கிடந்த யாழ்ப்பாணம் பண்டத்தரிப்புவாசி, முத்தன் என்பவரின் அபாய நிலைமையை ஆசிரியர் S. A. கந்தப்பு மூலம் தகவல் தெரிந்து ஆறு தொண்டர்கள் விரைந்து சென்று அவரை தொண்டர் முகாமிற்கு தூக்கி வந்து ஆரம்ப உதவி செய்து ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டது.

பார்பர்கள், (மருத்துவர்) பாராட்டத்தக்க முறையில் கூட்டுறவாகத் தொழில் செய்தது குறிப்பிடத்தக்கது. ஆனாலும் இருட்டுச் சந்தை வியாபாரத்தைக் கைக் கொண்டு மொட்டையடிப்பதற்கு 1-50 ஒன்றரை ரூபாயும் முகக்ஷவரம் செய்ய 35 சதமும் எடுத்துவந்தார்கள். சமாதான வேண்டுதல் பலனளிக்காமையால் நமது காரியதரிசி வேறு வழியின்றி போலீஸ் நீதவானிடம் முறையிட்டு, மொட்டையடிக்க 1 ரூபாயும் முகக்ஷவரம் செய்ய 25 சதமும் விதிக்கப்பட்டது.

கதிரைமலை சென்று திரும்பிய ராஜேஸ்வரி, என்னும் அம்மையார் கால்தவறி உருண்டு விழுந்து காயங்கள் ஏற்பட்டு அபாய நிலையில் இருந்த சமயம் தொண்டர்கள் சென்று ஆரம்ப சிகிச்சை செய்து ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

கதிர்காமம், புத்தல் ரோட் கல்வீடு 10-வது மைல் திசமாராமை ரோட் தண்ணீர்ப் பந்தல் செல்லக் கதிர்காமம், சுவாமிமலை ஆகிய இடங்களில் திருடர்கள் கைவரிசை மீறுவண்ணம் தொண்டர்கள் கடமையாற்றினர்களெனினும், அனேக திருட்டுகள் போலீஸாரால் தாக்கல் செய்யப்பட்டது.

களவு கொடுத்த தோட்டத் தொழிலாளர்களில் அனேகர் நமது தொண்டர் முகாமிற்கு வந்து சூழ்ந்துகொண்டு தாங்களும் இலங்கை இந்திய காங்கிரசில் பதிந்து வருடந்தோறும் பணங் கட்டி வருவதாகவும், கதிர்காமத்திலுள்ள காங்கிரஸ் தொண்டர்கள் தங்களின் கஷ்டமான சமயத்தில் ஏன் தாங்கள் கேட்கும் பணம் தந்து உதவி செய்ய முடியாதென்று அதிகாரத் தோரணையில் கேட்டார்கள். வாக்குவாதம் தடித்துவிடவே நமது தலைவர் வ. ஞானபண்டிதன் அவர்கள் தலையிட்டு இ. இ. காங்கிரசுக்கும் சமத்துவ சங்கத்திற்கும் ஒருவித சம்பந்தமும் இல்லை என்பதைத் தெள்ளத் தெளிய எடுத்துச் சொன்னதின் பின்னர், தொழிலாளர்கள் உண்மையை உணர்ந்தார்கள். அனேக தோட்டத் தொழிலாளர்கட்குப் பிரயாணச் செலவிற்குப் பணவுதவி செய்யப்பட்டது என வதுளை சமத்துவ சங்கக் காரியதரிசி அறிவிக்கிறார்.



## மதிப்புரை

### தாய்மை

[எழுதியவர்: டாக்டர் திரிபுரசுந்தரி எம். பி. பி. எஸ். வெளியிட்டோர் புதுமைப் பதிப்பகம், காரைக்குடி. பக்கம் 208. விலை ரூ 4–8–0]

இது அபூர்வமான புத்தகம். இல்லற வாழ்வுக்கு அடிகோலும் பருவத்திலிருந்து முதுமைப் பருவம் வரை பெண்கட்கு உதவி புரியும் கைப்புத்தகமாக இது அமைந்திருக்கிறது. பெண்களின் பருவகாலம், மாத நிகழ்ச்சிகள், கருப்பகாலம், பிரசவ காலம் அவைகளில் ஏற்படும் இன்ப துன்பங்கள், உணவுமுறை, சுகாதார முறை, வைத்தியமுறை முதலிய விஷயங்கள் தெள்ளத் தெளிய எடுத்துரைக்கப்பட்டிருக்கின்றன. எளிய தெளிந்த விளக்கமான வசனநடை. அமைவு மிக்க வாய்ப்புடையது. இப்புத்தகத்தின் தனிநயம் என்னவென்றால், விகார உணர்ச்சி ஏற்படாதவாறு படிப்போர்க்கு நல்லுணர்ச்சியுடனேயே புத்தகம் முழுமையும் படிக்க முடிகிறதென்பது தான், பருவமடையும் ஒவ்வொரு பெண்ணும் இப்புத்தகத்தைப் படித்தே தீரவேண்டும். கல்யாண காலத்தில் பரிசளிப்பதற்குத் தகுதியான புத்தகம் இது. இப்புத்தகத்தை எழுதித் தமிழகத்துக்குதவிய ஆசிரியர் பாராட்டுக்குரியவர். புத்தகம் பதிப்பதில் திறமையுடைய இப் பதிப்பகத்தார் தங்கள் வழக்கம் போல் உயர்ந்த காகிதம் சிறந்த அச்சு கட்டடம் முதலிய வகையில் மேம்பாட்டுடன் பதிப்பித்திருக்கிறார்கள்.

### காந்தியும் வள்ளுவரும்

[ஆசிரியர்: ராய. சொ. பக்கம் 84. விலை ரூ 1–8–0. கிடைக்குமிடம்; பாரதி பிக்சர்பாலஸ், காரைக்குடி]

சோமேசர் முதுமொழி வெண்பா, வள்ளுவர் நேரிசை, குமரேச வெண்பா முதலியவைகளின் மாதிரியில் இப்புத்தகம் ஆக்கப்பட்டிருக்கிறது. மகாத்மா காந்தியடிகளின் வாழ்க்கையும் குணநலமும் திருக்குறளுக்கு விளக்கவுரை போல் நிகழ்ந்திருக்கிறது. அதனை விளக்கி மேலிரண்டடியில் கூறியிருக்கிறார். கீழிரண்டடியில் பொருத்தமான திருக்குறள் எடுத்தாளப்பட்டிருக்கிறது.

### பலசரக்கு மூட்டை

[ஆசிரியர்: குத்தூசி. வெளியிட்டவர்: விடுதலை, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை. பக்கம் 158.]

காரசாரமான விஷயங்கள். சுயமரியாதைக் கட்சியைத் தாங்கி எழுதப்பட்டிருக்கிறது. தெரிந்து கொள்ள வேண்டிய பல விஷயங்கள் உள்ளன.

### புத்தக வரவு

பகுத்தறிவியக்கத்தின் பழமை:-ஆசிரியர்: ஜீவபந்து டீ. எஸ். ஸ்ரீ பால் அவர்கள், வெளியிட்டோர்: மகாவீர ஜைனசங்கம், 2/2 பெரியநெய்யக்காரன் தெரு, சென்னை.

நீ எந்தக் கட்சியில்?:—கவிஞர் தமிழ் ஒளி. உண்மைப் பிரசுரம், தேவகோட்டை.

ஆரியப் புல்லுருவி:—ஆசிரியர்: சுப. னாராயணன், எரிமலைப் பதிப்பகம், துறையூர், திருச்சி ஜில்லா.

திராவிடக் கழக லட்சியம்:—(பெரியாரின் இரு சொற்பொழிவுகளும், ஒருவரின் உண்மை விளக்கமும் அடங்கியது.) வெளியிட்டவர்: குடியரசுப்பதிப்பகம், ஈரோடு. விலை 0-4-0

மொழி–எழுத்து:—பெரியார் சொற்பொழிவு. குடி அரசுப் பதிப்பகத்தார், ஈரோடு. விலை 0-4-0.

காதல் பரிசு:—ஆசிரியர்: அள. ராமநாதன், செந்தமிழ்ப் பண்ணை, புதுப்பட்டி, புதுக்கோட்டை.

புதுக் குரல்:—கம்பதாசன், நிழல், திருவல்லிக்கேணி, சென்னை. விலை 0-12-0.

Edited, and Published by S. MURUGAPPAN Printed at the Pandian Press, Magalir Illam, Amaravathipudur, Ramnad Dist

